உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி | ஸ்ரீமுக ஸு ஆனிமீ கஉ | பகுதி |
| --- | --- | --- |
| 18 | 1933ஸு ஜூன்மீ 14உ | 12 |

## கடவுள் வணக்கம்.

நானினுங் கேனுமகந்தை எனக்கேன் வைத்தாய்
நல்வினைதீ வினையெனவே நடுவே நாட்டி
ஊனாரும் உடற்சுமையென் மீதேன் வைத்தாய்
உயிரெனவும் என்னையொன்று உள்ளேன் வைத்தாய்
ஆனமை மாயகில நிகில பேதம்
அனைத்தினுள்ளும் தானாகி அறிவானந்தத்
தேனாகிப் பாலாகிக் கனியாய்க் கன்னற்
செழும்பாகாய்க் கற்கண்டாய்த் திகழ்ந்த ஒன்றே. (1)

ஒன்றியொன்றி நின்றுநின்று மென்ன வென்னை
யுன்னி யுன்னும் பொருளலநீ உன்பாலன்பால்
நின்றதன்மைக் கிரங்கும்வை ராக்கியனல்லேன்
நிவர்த்தி யவைவேண்டுமிந்த நீலனுக்கே
என்றுமென்றும் இந்நெறியோர் குணமுமில்லை
இடுக்குவார் கைப்பிள்ளை ஏதோவேதோ
கன்றுமனத் தடனாடு தழைதின்றாற்போல்
கல்வியுங் கேள்வியு மாகிக் கலக்குற்றேனே. (2)

புகலரிய நின்விளையாட் டென்னே எந்தாய்
புன்மையறி வுடைய என்னைப் பொருளாப்பண்ணி
இகல்விளைக்கு மலமாயைகன் மத்தாடே
இடருறவும் செய்தனையே இரக்கமீதோ. (3)

கல்லாதேனானும் கற்றுணர்ந்த மெய்யடியார்
சொல்லாலே நின்னைத் தொடர்ந்தேன் பராபரமே. (4)

# அரும்பொருள் விளக்கம்

(1) (இ-ள்.) நீங்காமையாகியும், உலகிலுள்ள ரூபபேதங்கள் எல்லாவற்றினுள்ளும் தானேயாகி நிறைந்தும், ஞானனந்தத் தேனுகியும், பாலாகியும், பழமாகியும், செழுமையான சர்க்கரைப் பாகாகியும் கற்கண்டாகியும் ஒளிர்கின்ற ஒப்பற்ற பொருளே! இவ்விடத்தில் நான் நான் என்னும் அகங்காரத்தை என்னிடத்தில் ஏன் வைத்தனை? நல்வினை-தீவினை என்று இடையில் நிறுத்தி, மாமிசம் நிறைந்த உடற்பாரத்தை என்மேல் ஏன் வைத்தனை? அடியேனை உயிர் என்று சொல்லவும் உடற்குள் ஒரு பொருளாக ஏன் வைத்தனை? என்க.

நான் என்பது ஆணவமலத்தின் காரியம். நல்வினை—தீவினை கன்மமலத்தின் காரியம். ஊனூரும் உடற்சுமை மாயாமலத்தின் காரியம்.

(2) (இ-ள்.) ஒவ்வொரு நூலிலும் அழுந்தி யழுந்தி, அவ்வந்நூலிற் சொல்லியபடி யிருந்து பார்த்தும் என்ன பயன்? நீ என்னை முன்னிட்டு நினைக்கப்படுகிற பொருளா யிருப்பாயல்லை, (ஆதலால்) உன்னிடத்து அன்பு பூண்டுநின்ற அன்பர் குணத்தைப் பெறும்பொருட்டு உன்னை நோக்க விரங்கும்படியான பிரபஞ்ச மார்க்கத்தில் வெறுப்புடையேன் அல்லேன். இந்தப் பொய்யனுக்கு அப்பொய் நெறிகள் ஒழிதல் வேண்டும். எக்காலத்திலும் இந்த நன்னெறியை அடைதற்குச் சிறிது நற்குணமுமில்லை. (அங்ஙனமாக) எடுப்பார் கைப்பிள்ளை ஆவதற்குக் காரணம் யாதோ? வருந்துகின்ற மனத்துடன் ஆடு தழை மேய்ந்தாற் போலப் பலவகை யான கல்வி கேள்விகளையுடையேனுகிக் கலங்கலுற்றேன். இதென்ன கொடுமை என்க.

(3) (இ-ள்) தந்தையே! எடுத்துப் பேசுதற்கரிய உன் திருவிளையாடல் யாதோ? அற்பமாகிய அறிவினையுடைய அடியேனை ஒரு பொருளாக மதித்து, போர் விளைவிக்கும் பல மாயா கன்மங்களினிடையே துன்பம் அடையவும் பண்ணினையே. ஆன்மாக்களின் மீது வைத்த இரக்கமானது இதுதானே? என்க.

சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய என்மாட்டுக் கருணை வையாது மலம், மாயை, கன்மம் முதலியவற்றிற் கட்டுப்பட்டுத் திண்டாடச் செய்யும் திருவிளையாடல் நினது கிருபைக்கு நலமோ என்பார் இரக்க மீதோ என்றனர்.

(4) (இ-ள்) அறிவு நூல்களை நான் கல்லாதவனேயாயினும் அவைகளைப் படித்து உண்மை யுணர்ந்த அடியார்கள் சொல்லை ஆதாரவாகக் கொண்டு தேவரீரைப் பற்றினேன் என்க.




# தமிழ்ப் பண்டிதர் மகாநாடு



பண்டைக்காலத்தில் முடியுடை மூவேந்தரும் வள்ளல்களும் முத்தமிழ் மொழியைப் போற்றி வளர்த்தனர். தமிழ்ப்புலவர்களைத் தம் குருமாராகக் கொண்டு பேணினர். ஒரு தமிழ்வேந்தன் "யான் இது செய்யேனாயின் தமிழ்ப்புலவர் பாடாது ஒழிக என் நாடு" என்று வஞ்சினம் கூறிய வரலாற்றை இன்றும் முழங்கிக் கொண்டு இருக்கின்றோம். இப்பெருமைகட்கேற்பத் தமிழ்ப்புலவரும் ஆழ்ந்த கல்வியும், தெளிந்த அறிவும், பரந்த நோக்கமும் படைத்திருந்தனர். அரசராயினும் உறுதி பயக்கும் உண்மைகளை அஞ்சாமல் எடுத்துரைத்தனர். பண்டைக்காலத் தமிழ்ப்புலவரிடம் இச்சகம் பேசும் இழிகுணம் எள்ளளவும் இருந்ததாகத் தெரியவில்லை. இதற்கு நக்கீரர், அவ்வையார், கம்பர், ஒட்டக்கூத்தர் போன்ற பெரும்புலவர் வரலாறுகள் இன்றும் சான்று பகர்கின்றன. இக்காலத்தமிழ்ப்புலவர் நிலை என்ன? வெட்கம்! வெட்கம்!! "அடகெடுவாய் பலதொழிலு மிருக்கக் கல்வி அதிகமென்றே கற்று விட்டோம் அறிவில்லாமல்" என்று சமீப காலப் புலவர் ஒருவர் வயிறெரிந்து பாடிய நிலைமையேதான் இன்றைக்கும் இருந்துகொண்டிருக்கிறது. மூவேந்தர் மறைந்தனர். முச்சங்கம் மறைந்தன. பாவேந்தர் வறுமைக்காற்றில் இலவம் பஞ்சாகப் பறந்து கொண்டிருக்கின்றனர். இக்காலப் புலவர்கட்கு வள்ளல்கள் ஆங்கிலக்கல்லூரிகளும் கலாசாலைகளுமே. இவைகளைத் தவிர நாட்டில் புலவரை ஆதரிக்கும் தேவேந்திர தருக்கள் எவரும் இலர். அந்தக் கல்லூரிகளிலும்—கலாசாலைகளிலும் பண்டிதர்களாக விளங்கும் தமிழ்ப்புலவர் கதி என்ன என்பதே இப்பொழுது கேள்வி.

சென்றமாதம் திரிச்சியில் கல்வி மகாநாட்டை ஒட்டி இரண்டாவது தமிழ்ப் பண்டிதர் மகாநாடு உயர்திருவாளர் கா. நமசிவாய முதலியார் தலைமையில் நடைபெற்றது. தஞ்சை உயர்திரு. டி. வி. உமாமகேசுவரம் பிள்ளை தமிழ்க்கொடி உயர்த்தினர். மாஜி ஜில்லா கல்வி அதிகாரி உயர்திரு. கே. சுப்பையர் திறப்புவிழா நிகழ்த்தினர். வர

வேற்புக் கழகத்தலைவரா யிருந்தவர் உயர்திரு. எஸ். கே. தெய்வசிகாமணியார். தமிழ்ப் பண்டிதர் மகாநாடு முன்னர் ஒன்று கூடியது. இது காறும் உறங்கிவிட்டுச் சென்றமாதம் தலை தூக்கிற்று. முப்பத்துமூன்று ஆண்டுகட்கு முன் தோன்றிய மதுரைத் தமிச்சங்கமும், அதன் பின்னர்த் தோன்றிய கரந்தைத் தமிழ்ச்சங்கமுங் கூட ஆண்டுவிழாக்களில்தான் ஜீவித் திருப்பதாகக் காட்டிக் கொள்ளுகின்றன. காலஞ்சென்ற கவிராயர் பாரதியார் வேண்டிய பிறநாட்டு நல்லறிஞர் சாஸ்திரங்களையோ, இறவாத புகழுடைய புதுநூல்களையோ அச்சங்கங்கள் தமிழ்மொழியில் இயற்ற இதுகாறும் முற்படவில்லை. தனிப்பட்ட தமிழறிஞர்களும் அம்முயற்சியில் தலையிடவில்லை. இக்காலத்தில் நாகரிகம் பெற்று விளங்குவதாகச் சொல்லப்படும் நாடுகளெல்லாம் தந்தம் தாய்மொழிகளை உயிராகப் போற்றி உயர்வடையச் செய்திருக்கின்றன. நமது நாட்டில் ஆந்திரர், வங்காளிகள், மஹாராஷ்டிரர், மலையாளிகள் முதலியவர்கள் தங்கள் தாய் மொழிகளைப் பலவகையாலும் வளர்ச்சிபெறச் செய்து கொண்டிருக்கின்றனர். நமது தமிழறிஞர் என்ன செய்துகொண் டிருக்கின்றனர்? புராணக் கதைகளை விரிப்பதிலும், வடசொற்கலவாத தனித் தமிழ் வாதத்திலும் முனைந்து நிற்கின்றனர். இப்படி யிருந்தால் நாட்டிலும், கல்லூரிகளிலும், கலாசாலைகளிலும் தமிழ்ப்பண்டிதர்களின் மதிப்பு உயருமா? தமிழ் வளருமா? என்றே கேட்கின்றோம்.

நமது தாய்மொழி வளர்ச்சி பெருமைக்குக் காரணம் அந்நிய அரசாங்கம் என்று அடிக்கடி சொல்லப்படுகிறது. இஃது ஒரு வகையில் உண்மை என்றே ஒப்புக்கொள்ள வேண்டும். ஆனால் எல்லாப் பொறுப்பையும் அரசாங்கத்தின் தலையில் சுமத்திவிட முடியாது என்பதே நமது கருத்தாகும். ஒரு நாட்டின் கல்வி வளர்ச்சி அந் நாட்டு அறிஞர்களின் அறிவாற்றலையும் முயற்சித் திறமையையுமே சார்ந்து நிற்கின்றது. காலப்போக்கை யொட்டிச் சமயோசித புத்தியுடன் தமிழ்ப்பண்டிதர்கள் முயன்றால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை என்று அறிவித்துக் கொள்ளுகின்றோம். திறப்பு விழாத் தலைவர் தமிழ் வளர்சிக்குக் கூறிய யோசனைகள் பொன்னேபோல் போற்றத் தக்கவையாகும். அவர்கூறியது போல் மகாநாடுகளைக் கூட்டிக் கலைத்து விடும் அளவில் நின்று விடுவதிற் பயனில்லை. நிரந்தரக் கமிட்டி நியமித்துப் பத்திரிகைகளின் வாயிலாகவும், பிரசங்கங்களின் வாயிலாகவும் தீவிரமாகக் கிளர்ச்சி செய்து தமிழ் அன்னையை அலங்கரிக்க எல்லாப் பண்டிதர்களும் முன்னணியில் நிற்கவேண்டும். நம்முடைய பண்டிதர்கள் கிணற்றுத் தவளைகளாய்ப் பழம் பெருமைகளைப் பன்னிப் பன்னிப் பேசிக் கனவு காண்பதை விட்டொழித்துக் காலத்துக்கேற்றவாறு இலக்கிய வளர்ச்சி செய்யும் மனப்பான்மையைப் பெருக்கிக்கொள்ள வேண்டும். வரவேற்புக் கழகத் தலைவர் "தற் காலத்துப் பண்டிதர்களின் நிலைமை உயர வேண்டுமானால் அவர்

கள வெறும் மொழிப் புலமை அளவில் நில்லாமல், மற்றைத் துறை களிலும் தொடர்பு கொள்ளவேண்டும்'' என்று கூறியது பெரிதும் குறிப்பிடத்தக்கதாகும். ஆங்கிலப் பள்ளிக்கூடங்களில் தமிழ்ப் பண்டிதர்கள் சக்களத்தி மக்களாகக் கருதப்படும் உண்மை நாட றிந்த செய்தி. இதற்கு மூலகாரணம் அவர்களுக்குக் கொடுக்கப் படும் குறைந்த சம்பளமே என்பதை யாராலும் மறுக்க முடியாது. ஓரே அந்தஸ்துடைய ஆங்கில ஆசிரியர்கட்கு அதிகச் சம்பளமும், தமிழாசிரியர்கட்கு அற்பச் சம்பளமும் கொடுக்கும் ஏற்பாடு பெரிய கொடுமையாகும். நீண்ட நாட்களாகப் பலர் இவ்விஷயமாக முறையிட்டும் அரசாங்கத்தாரின் செவிகளில் ஏறவில்லை. இது ஒண்ட வந்த பிடாரி ஊர்ப்பிடாரியை ஓட்டிய கதையாக இருக்கிறது என்றே கூற வேண்டும். இம்மகாநாட்டின் தலைவர் கா. நமசிவாய முதலியா ரவர்கள் கல்லூரி—கலாசாலைப் பண்டிதர்கட்குச் செய்துள்ள எச்ச ரிக்கை பெரிதும் 'போற்றகதக்கதாகும். அவர் ஆங்கிலங் கற்றோர் பண்டிதர்களைப் பற்றிக் கூறும் சில குறைகளை எடுத்துக் காட்டினார். வகுப்பை அமைதிபெற நடத்தும் திறமை இன்மை, பாடங்களைப் பழைய முறைப்படியே கற்பித்தல், பரந்த அறிவின்மை, ஒற்றுமை இன்மை முதலியவைகளைக் குறிப்பிட்டு அவைகட்குச் சமாதானமும் கூறியிருக்கிறார். இவைகளைப் பண்டிதர்களும் அதிகாரிகளும் நன்கு கவனிக்க வேண்டும் என்பது எமது வேண்டுகோள்.

மேற்படி பண்டிதர் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட முக்கிய மான தீர்மானங்கள் வருமாறு:

தற்காலம் கொடுக்கப்பட்டுவரும் ஓரியண்டல் பட்டத்திற்குப் பதிலாக பி. ஒ. எல்., என்ற டிக்ரியைக் கொடுக்குமாறு அரசாங்கத் தாரை இம் மகாநாடு வேண்டுகிறது.

கீழ்த்தர பண்டிதர்கட்கு ரூ. 40—2 60 வரைக்கும், உயர்தரக் கலாசாலைப் பண்டிதர்கட்கு ரூ. 60—5 90 வரைக்கும், கல்லூரிப் பண்டிதர்கட்கு ரூ. 90—10 150 வரைக்கும் சம்பள விகிதம் ஏற்படுத்த வேண்டும்.

பண்டிதப் பயிற்சிக்காகக் கொடுக்கப்பட்டுவந்த உபகாரச் சம்ப ளம் நிறுத்தக்கூடாது. பண்டிதப் பயிற்சியைச் சைதாப்பேட்டை போதனுமுறைக் கலாசாலையுடன் சேர்க்கவேண்டும். இம்மாதிரியே ஓரியண்டல் கலாசாலைகளிலும் ஓர் வகுப்பை ஏற்படுத்த வேண்டும்.

தமிழ்ப்பாட புஸ்தகங்கள் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் தலைமை யாசிரியர்கள் தமிழ்ப்பண்டிதர்களைக் கலந்து ஆலோசிக்க வேண்டும்.

தேச பாஷைகளாகிய தமிழ், தெலுங்கு, கன்னடம் மலையாளம் போர்டு ஆப் ஸ்டடீஸ்களில் அப்பாஷைகளைப் போதித்துவரும் பண்டி தர்கட்கே பெரும்பான்மையான ஸ்தானங்களைக் கொடுக்க வேண் டும்.

எஸ். எஸ். எல். ஸி. தமிழ்ப்பாடப் புஸ்தகங்களில் இயன்றவரை கருகலான புராணக் கதைகளுள்ள பகுதிகளைக் குறைத்து அமைக்க வேண்டும்.

வித்துவான் பட்டப் பரீக்ஷைக்குரிய பாடப் புத்தகங்களை இரு பிரிவுகளாக அமைத்து மாணவர்கள் பரீக்ஷிக்கப்படவேண்டும். ஒரு தடவை முதற் பிரிவிலோ இரண்டாம் பிரிவிலோ தவறியவர்கள் தவறிய பகுதியில்மட்டும் மீண்டும் பரீக்ஷிக்கப்படவேண்டும்.

ஷை மகாநாடு நிறைவேற்றிய தமிழ்ப்பண்டிதாகட்குரிய சம்பள விகிதத் தீர்மானத்தில் கண்ட தொகை முற்றிலும் நியாயமான தென்றே அறிவுடையவர்கள் ஒப்புக்கொள்ளுவார்கள். சம்பளம் உயர்ந்தால் பண்டிதர்களின் அந்தஸ்தும் தானே உயர்ந்து விடும் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. பண்டிதர்கட்குரிய பயிற்சி விஷயத்தில் எல்லாரும் சிரத்தை காட்டவேண்டும். அப்பயிற்சிக்குக் கொடுக்கப்பட்டு வந்த உபகாரச் சம்பளம் நிறுத்தப்பட்டது பெரிய அக்கிரமம் என்றே கூறவேண்டும். கலாசாலைகளில் வைக்கப்படும் தமிழ்ப் பாட புஸ்தகங்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை சிறப்பாகப் பண்டிதர்கட்கே இருக்கவேண்டும். இதில் தலைமையாசிரியர்களில் பலர் நுழைந்து வெளியாரின் தயவுதாக்ஷண்யங்கட்குக் கட்டுப்பட்டு ஆபாசமான புஸ்தகங்களை வைத்துக் கெடுத்து விடுகின்றனர் என்பது பிரத்தியக்ஷ அநுபவம். எஸ். எஸ். எல். ஸி. தமிழ்ப் பாடப் புஸ்தகங்களில் பொருளற்ற புராணப் பகுதிகளைப் பாடமாக ஏற்படுத்தி விடுவது என்ன முறை என்று விளங்கவில்லை. புதிய உணர்வும் அறிவும் வளர்ச்சி பெற வேண்டும் என்ற வேட்கை எழுந்துள்ள இக்காலத்தில் புராணங்களைப் பாடமாக வைப்பது கேலிக் கூத்தாகவே இருந்து வருகிறது. இனியேனும் சர்வ கலா சாலையார் இவ்விஷயத்தை நன்கு கவனித்துத் தக்க அறிவு வளர்ச்சிக்குரிய பாடங்களை ஏற்படுத்த வேண்டும் என்று விரும்புகின்றோம். வித்துவான் பரீக்ஷை விஷயத்தில் சர்வகலாசாலையாரும் மதுரைத் தமிழ்ச் சங்க தோரணையைப் பின்பற்றுவது வருந்தத் தக்கது. வித்துவான் பரீக்ஷைக்குரிய பாடபுத்தகங்கள் மிக மிக அதிகம் என்று எங்கும் கருதப்படுகிறது. தமிழ் கற்க விரும்புவோர் தொகை மிகக் குறைவு என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். இங்கிலையில் அருமையாகப் பரீக்ஷைக்கு வருவோர் ஏதோ ஒன்றில் தவறிவிட்டால் மீண்டும் எல்லாவற்றையும் படித்துவிட்டுத் தான் பரீக்ஷைக்கு வரவேண்டும் என்ற ஏற்பாடு கொடுமையானதாகும். ஆங்கிலப் பட்டப் பரீக்ஷை முறையைத் தமிழ்ப் பரீக்ஷைக்கும் ஏற்படுத்தினல் மிகவும் நலமாயிருக்கும். தமிழ் கற்போர் தொகையும் பெருகும். தமிழ்ப் பண்டிதர் வேட்கையை ஆண்டவன் நிறைவேற்றுவாஞக.

ஓம் தத் ஸத்.

# நேயர்கட்கு ஒரு வேண்டுகோள்.

## 19-வது ஆண்டின் முன்னறிக்கை

நாளிது ஸ்ரீமுக ஆண்டு ஆடித்திங்கள் 1-ம் தேதி (16-7-33) நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகைக்கு 19-வது ஆண்டு பிறக்கப் போகிறது. "ஆனந்தபோதினி" பருவத்திற்கேற்ற வளர்ச்சி பெற்றுப் பற்பல; சிறப்பியல்புகளுடன் விளங்கி வருவது நேயர்கள் அநுபவத்தில் உணர்ந்துள்ள விஷயமாகும். தமிழ் மக்கட்கு எல்லாத் துறைகளிலும் ஒரு விழிப்பையும் எழுச்சியையும் உண்டாக்கித் தக்க வழிகாட்டியாய் விளங்குவதே "ஆனந்தபோதினி"யின் முதற்பெரு நோக்கம். 19-வது ஆண்டில் இன்னும் குறிப்பிடத்தக்க விசேஷ அம்சங்களுடன் "ஆனந்தபோதினி" உங்கட்கு மகிழ்ச்சிப் பெருக்கை அளிக்கும் என்று தெரிவித்துக் கொள்ளுகின்றோம். சமயம், சமூகம், மொழி முதலியவைகளின் முன்னேற்றத்திற்கான பல கட்டுரைகளையும் கதைகளையும் சிறந்த அறிஞர்களைக் கொண்டு புதிய முறையில் எழுதிவர ஏற்பாடு செய்திருக்கின்றோம். சென்ற ஆண்டைக் காட்டிலும் 19-வது ஆண்டில் விநோதப்படங்களும், கதைப்படங்களும் அதிகம் வெளிவரும் என்ற செய்தியையும் தமிழ் மக்கட்கு இப்பொழுதே தெரிவித்துக் கொள்ளுகின்றோம். தமிழ் நாட்டில் நமது "ஆனந்தபோதினி" ஒன்றுதான் ஆதியில் குறைந்த சந்தாவில் தொடங்கப்பட்ட மாத சஞ்சிகை என்னும் உண்மையை நேயர்கட்குத் தெரிவிக்க வேண்டியது அநாவசியம் என்றே கருதுகின்றோம். அதன் பின்னர்த் தோன்றி வரும் பத்திரிகைகளும் அதே வழியைப் பின்பற்றத் தொடங்கியிருப்பது குறிப்பிடத் தக்க செய்தியாகும். பொருள் நெருக்கடி மிகுந்துள்ள இக்காலத்தில் தமிழ் மக்களின் சௌகரியத்தை முன்னிட்டு 2-அணுவாக விற்கப்பட்டு வந்த "ஆனந்த போதினி" தனிப் பிரதியை அடுத்த 19-வது ஆண்டிலிருந்து $1\frac{1}{2}$-அணுவுக்கே விற்க ஏற்பாடு செய்திருக்கிறோம். அடுத்த ஆண்டிலிருந்து போட்டிப் பரிசுகளையும் "ஆனந்த போதினி" தாங்கிவரும். அதற்கென்று மாதந்தோறும் நூறு ரூபாய் ரொக்கப் பரிசு கொடுக்கவும் முடிவு செய்துள்ளோம். தமிழ் மக்கள் நன்முறையில் பொழுதுபோக்க வேண்டும் என்றும், லாபம்பெற வேண்டும் என்றும் கருதியே காலப்போக்கை ஒட்டி இந்தப் போட்டிப் பரிசு ஏற்

படுத்தப்பட்டிருக்கிறது. இதற்காக நாம் மற்றவர்களைப் போல் பிரவேசக் கட்டணம் வசூலிக்க விரும்பவில்லை என்பதையும் நேயர்கட்குத் தெரிவித்துக்கொள்ளுகின்றோம். சென்ற பதினெட்டு ஆண்டுகளாக "ஆனந்தபோதினியை" அன்புடன் ஆதரித்து வரும் தமிழ் மக்கள் இனிமேலும் அவ்வாறே ஆதரிப்பதோடு புதிய சந்தாதாரர்களையும் சேர்த்துக்கொடுக்க விரும்புகின்றோம். சுயநலமற்ற முறையில் பொதுநலத் தொண்டாற்றுவ தொன்றே எமது முதற்பெரு நோக்கமாதலால் சந்தா நேயர்கள் எமக்கு இச்சிறிய உதவி செய்யத் தவற மாட்டார்கள் என்றே பெரிதும் எதிர்பார்த்து நிற்கின்றோம். நீங்கள் "ஆனந்தபோதினி"க்குச் செய்யும் உதவி தமிழகத்திற்குச் செய்யும் அருந்தொண்டாகும் என்பதை யாம் விரித்துக் கூற வேண்டியதில்லை. ஆகையால் "ஆனந்தபோதினி"யின்பால் அன்பு பூண்டு ஆதரித்துவரும் அன்பர்கள் எல்லாரும் 19-வது ஆண்டின் சந்தாத் தொகையை நாளிது ஸ்ரீமுகஹு ஆனிமீ 27-ம் தேதிக்(10-7-33)குள் மணியார்டர் மூலமாகவோ நேரிலோ எங்கட்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டுகின்றோம். சந்தாத் தொகையின்பொருட்டு வி. பி. அனுப்புவதால் தபால் செலவு 4-அணு மணியார்டர் கமிஷன் 2-அணு ஆக 6-அணு அதிகச் செலவும் சஞ்சிகை வந்து சேர வீண் காலதாமதமும் ஆகும். ஆகையால் எல்லா நேயர்களும் மேற் குறிப்பிட்ட தேதிக்குள் மணியார்டர் செய்து விடுவதுதான் உங்கட்கும் எங்கட்கும் லாபமும் சௌகரியமும் ஆகும். வி. பி. அனுப்புவதால் இன்னொரு சங்கடமும் உண்டு. அதாவது வி. பி. வந்தால் ஏழு நாளைக்கு மேல் தபாலாபீஸில் வைத்திருக்கமாட்டார்கள். அதற்குமேல் இருக்க வேண்டும் என்றுவிரும்புகின்றவர்கள் நாள் 1-க்கு 2-அணு வீதம் ஸ்டாம்பு வாங்கி ஒட்டி விண்ணப்பித்துக்கொள்ள வேண்டும். அதுவும் பத்து நாட்களுக்குமேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். இந்தச் சங்கடங்களை யெல்லாம் நோக்கும்போது அன்பர்கள் எல்லாரும் சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பி ஆதரிப்பதே நலம்.

குறிப்பு:—முன் பணம் அனுப்புவோர் பழைய சந்தாதாரர்களாயிருந்தால் மணியார்டர் கூபனில் தங்களுடைய சந்தா நம்பரைக் குறிப்பிட்டு "19-வது ஆண்டுக்கு" என்றுவிவரம் எழுதவேண்டும். புதிய சந்தாதார்கள் 'புதிய ஆண்டுக்கு' என்ற விவரம் எழுத வேண்டும்.

மானேஜர்.




# கமலத்தின் காதல்

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி.ஏ., பி. எல்.)

முன்னொருகாலத்தில் பலவகை வளங்களும் பொருந்தித் திகழ்ந்த பழையனூர் என்னும் சிற்றூரில் வேளாளர் பெருங் குலத்தில் அழகிற் சிறந்த ஒரு மைந்தன் தோன்றினான். கோல மாமயில் மீது குலவும் குமரன் அருளால் பிறந்த அம்மைந்தனுக்கு முருகன் என்று பெயரமைத்தார்கள். இளங்கதிர்போல் இலங்கிய முருகன், இளமையிலேயே அருங்கலை பயின்று இனிய மதிநலம் வாய்ந்து விளங்கினான். இம்மைந்தன் கலை பயின்ற கல்லூரியிற் கற்பகத்தின் பூங் கொம்புபோன்ற ஒரு கன்னியும் கல்வி கற்றுவந்தாள். கலைபயில் தெளிவும், காட்சிக் கினிமையும் வாய்ந்த கன்னியின் தன்மை கண்ட முருகன் அவள்பாற் காதலுற்றான். அம்மங்கையின் குலம் சிறிது தாழ்ந்ததாயினும், அவளது நலத்தைக் குலத்தினும் பெரிதாகப் போற்றினான். கமலம் என்னும் பெயர் அமைந்த அம்மங்கையும் முருகனது குணத்தையும் நலத்தையும் கண்டு அவனைக் காதலித்தாள். ஆயினும் பழம் பெருமையும் குலக் கொடுமையும் நின்று பறையறைந்த பழையனூரில், தன் எண்ணம் நிறைவுறாதென்றஞ்சி, அருங் காதலைத் தன் மனத்திலேயே அடக்கிவைத்தாள். இவ்வாறு இரண்டு ஆண்டுகள் கழிந்த பின்னர் முருகனது தந்தையார் மைந்தனுக்கு மணவணி காணக் கருதி, தம் குலத்திற் குன்றாக் கொழுங்குடியில் நல்ல குணம்வாய்ந்த நங்கையை நாடினார். இதை அறிந்த மைந்தன், மனம் நொந்து தான் காதலித்த கமலத்தை யன்றி மற்றொரு மங்கையை மணப்பதில்லை என்று மன உறுதி கொண்டான். ஆயினும் கமலம் தன்னைக் காதலனாக ஏற்றுக்கொள்வாளோ என்று அறிய ஆவலுற்றான். ஒரு நாள் கல்லூரியினின்றும் இருவரும் தனியாக வருகையில் முருகன் தனது மனத்தில் எழுந்த காதலை மங்கையிடம் கரவாது உரைத்தான். அப்போது நிறை அமைந்த அம்மங்கை நாணத்தால் தலை கவிழ்ந்து புன்முறுவல் பூத்து நின்றாள். மங்கையின் காதலைக் குறிப்பால் உணர்ந்த முருகன் மனமகிழ்ந்து "உன்னை அன்றி மற்றொரு மாதை மனத்திலும் தீண்டேன்" என்று உறுதி கூறினான். அது கேட்ட நங்கை, பொங்கி எழுந்த பேரன்பால் தலைமகனை நோக்கி, "ஐயனே! முற்றிய கலையின் ஒளியாய முருகனே! உன்னை யன்றி மற்றொரு தலைவனைக் கனவிலும் கருதேன்! உன்னை எய்தப் பெறேனாயின் உயிர் துறப்பேன்" என்று மெல்லிய மொழிகளால் இனிது

எடுத்துரைத்தாள். இவ்வாறு காதலாற் பிணிப்புற்ற இருவரும் அன்று பிரிந்து தத்தம் மனையகம் சேர்ந்தார்கள்.

சில நாட் சென்ற பின்னர் குலத்திலும் நலத்திலும் குன்றாத காரான மரபில் பிறந்த ஓர் கன்னியை முருகனுக்கு மணம் பேசி முடித்தார்கள். திருமணத்திற்குரிய வேலைகள் எல்லாம் திருத்தமாக நடைபெற்றன. பொன்னாலும் மணியாலும் அழகிய அணிகள் செய்யப்பட்டன. மனம் பொருந்தாத மணத்திற் கிசையாத முருகன், தாய் தந்தையர் மொழி திறம்பாத் தன்மை வாய்ந்தவனாதலின், தன் நெஞ்சில் நீங்காது நின்ற நங்கைக்குத் தன் கருத்தை அறிவித்து மறையக் கருதினான். அவ்வாறே தன் எண்ணத்தை ஓர் ஓலை முறியில் எழுதிக் கமலத்தின் பள்ளியறையினுள்ளே மெல்லத் தள்ளிவிட்டு, நள்ளிரவில் எவரும் அறியாதவாறு முருகன் மறைந்தான்.

மறுநாட் காலையில் மைந்தனைக் காணாத பெற்றோர் மனம் உளைந்து காடு நாடெங்கும் தேடி அலைந்தார்கள். மணமகனைக் காணாத செய்தி ஊர் முழுதும் பரவிற்று. கிழக்கு வெளுத்தவுடன் கண் விழித்த கமலம், தன் அறையில் ஓர் ஓலை சுருண்டு கிடக்கக் கண்டு, அதனை எடுத்து நெகிழ்த்து நோக்கினாள்; திகைத்தாள்; மெய்நடுங்கினாள்; கண்கலங்கிக் கண்ணீர் உகுத்தாள்; கண்ணீரைத் துடைத்து மீண்டும் ஓலையைக் கண்களால் நோக்கினாள்; "கமலமே! என் கண்ணே; நான் உன்னைவிட்டுப் போகின்றேன்; என்னை நீ இனிக் காணாய்" என்ற மொழிகளைக் கண்டு கலங்கினாள். மயங்கினாள். "மற்றொரு மங்கையை மணந்து வாழ்வதினும் ஆவி துறத்தலே இனிதாகும், என்று முருகன் துணிந்தானோ? ஐயோ! முருகா! பேதையாய என்பால் வைத்த நேயத்தால், நின் ஆவி துறக்கவும் நேர்ந்ததோ! ஐயனே! வருந்தி அழைத்தால் நீ வாராயோ? 'நெஞ்சில் ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும், முருகா என்றோதுவார் முன்' என்னும் பொய்யா மொழியும் பொய்த்ததோ! அந்தோ! அன்பனைக் காணாது என் நெஞ்சம் அலறுகின்றதே! என் செய்வேன்" என்று மயங்கிச் சோர்ந்தாள். அப்பால் ஒருவாறு மயக்கம் தெளிந்து முருகனையே நினைந்து நெஞ்சம் குழைந்து ஊண் உறக்கமின்றி மெலிந்து நலிந்தாள். தன்பால் வைத்த தலையாய அன்பினால் ஆவியிழந்த முருகனை மறவாது இவ்வுலக இன்பத்தை அறவே வெறுத்தாள். காதலனைக் கருத்தில் அமைத்துக் கன்னிமாடம் புகுந்து தவம்புரிந்து காலங்கழிக்கக் கருதினாள். தன் கருத்தைப் பெற்றோரிடம் அறிவித்து நான்கு காதவழி தூரத்தில் அமைந்திருந்த நல்லூர்க் கன்னிமாடம் சென்று சேர்ந்தாள். அங்கு மாதவமியற்றி, மனத்துக் கண் மாசின்றி வாழ்ந்த மங்கையரால் வழிபடும் பெருமை வாய்ந்து விளங்கினாள்.

"ஆடவர் தனதிடத் தருகுபோகினும்
நாடி மற்றவர் பெயர் நயந்து கேட்பினும்
வீடுவல் உயி ரெனவெருளும் மற்றவள்
சேடியர் வழிபடச் செல்லும் செல்வியே."

என்று யாவரும் கமலச் செல்வியைக் கண்ணினும் அருமையாகப் போற்றினார்கள். முற்பகல் முழுதும் கன்னிமாடத்திற் கடுந்தவம் புரிவதும், அந்திமாலையில் அந்நல்லூரில் அமைந்த நாதனை மனம் மொழிமெய்களால் வழிபடு

வதுமே அம்மங்கையின் வாழ்க்கை நெறியாய் அமைந்தது. நன்னெறி காட்டும் நல்லூர்ப் பெருமான் முன்னே நின்று அன்பினால் அகம் குழைந்து,

"நீத்த நெறியானை நீங்காத் தவத்தானை
நாத்த நெறியானை நல்லூர்ப் பெருமானை
காத்த நெறியானைக் கைகூப்பித் தொழுது
ஏத்தும் அடியார்கட்கில்லை இடர்தானே."

என்று கனிந்து பாடிக் கண்ணீர் உகுப்பாள். இவ்வாறு ஆறு ஆண்டுகள் அகன்றன!

அப்பொழுது நல்லூரிலமைந்த நாதனை, அறிவிற் சிறந்த முனிவர் ஒருவர் நாள்தோறும் மும்முறை வழுவாது வழிபாடு இயற்றிவந்தார். காய்கனிகளை அருந்திக் கடுந்தவம் புரிந்த அம்முனிவர் கற்றோர் யாவரும் அறியா அறிவினராய், செற்றம் நீக்கிய மனத்தினராய், விரையுறு நறுமலரேந்தி இறைவனை அன்பினால் இன்புற வணங்கி, காதலால் கசிந்து கண்ணீர் வடிப்பார். இங்ஙனம், நல்லாற்றினின்று நாதனைப் போற்றிய முனிவரது பெருமையைத் தன் கண்களாற் கண்ட கமலம், அவரே தன் மனத்துயர் தீர்க்கும் மருந்தென்றெண்ணினாள். இவ்வாறு இருக்கையில் ஒருநாள் அந்திமாலையில் இறைவனை வழிபடச் சென்ற கமலம், அருகே எவரும் இல்லாமை கண்டு தன் மனத்துயரை நல்லூர்ப் பெருமானிடம் சொல்லி முறையிட்டாள். "நாதனே! நல்லூர்ப் பெருமானே! என்னையொத்த பாவியா இவ்வுலகில் உண்டோ? அறிவும் அழகும் அமைந்த முருகன் என்னால் ஆவிதுறந்தும், நான் உண்டு உடுத்து உயிர்வாழ்ந்திருக்கின்றேனே! என்னைக் காதலித்த கொடும் பிழையால் உயிர் நீத்த முருகன் பின்னே செல்லாது பாவியேன் கன்னிமாடத்தில் காலங்கழிக்கின்றேனே! ஐயனே, எனது பெரும் பிழையைப் பொறுத்து என்னையும் அழையாயோ!" என்று அழுது அகங்குழைந்து நின்றாள்.

அந்நிலையில் இறைவன் பின்னே நின்று பணி செய்த முனிவர் மங்கையின் துயரை அறிந்து மனம் கரைந்து கண்கலங்கி வெளிப்போந்து ஈரமளாவிய இனிய மொழிகளால் "அம்மையே, ஏழை பங்காளனான இறைவன் உன் அருந்துயரை மாற்றி அருள் செய்வான்" என்று ஆறுதல்கூறிக் கண்ணீர் பெருக்கினார். தன் துயரால் மனம் கரைந்த முனிவனது கருணையைக் கண்டு ஆற்றாத மங்கை, அவரை நோக்கி, 'ஐயனே! நலமொன்று மறியாத ஏழையேன் பொருட்டு அருங்கலை அறிந்த தாங்கள் வருந்தித் தளர்வது தகுமோ! அந்தோ! அன்றும் ஓர் அன்பனுக்கு ஆறாத்துயர் விளைத்தேன்! இன்றும் முனிவராய உமது உள்ளத்தை வருத்தினேன்! இவ்வாறு நல்லோர்க்குத் துயர் விளைக்குமாறு பாவியேன் இவ்வுலகிற் பிறந்தேன்!' என்று மனம் நொந்தாள். அப்போது முனிவர், மங்கையின் தூய தன்மையை நினைந்து மீண்டும் கண்ணீருகுத்தார். முனிவரது கனிந்த மனப்பான்மையைக் கண்ட கமலம், கைகுவித்துத் தொழுது, 'ஐயனே! பாவியேன் செய்த பாவம் மலையினும் பெரிதாகும்! முருகனைக் காணாத துயரத்தால் யான் இன்னும் சில நாளில் இறந்து ஒழிவேன்! அவ்வாறு இப்பிறப்பில் ஆவி துறப்பினும் மீண்டும் இம்மண்ணுலகில் பிறந்து முருகனையே மணம்புரியக் கருதுகின்றேன்; ஏழையேன் கருத்தறிந்து முடிக்குமாறு, இறைவனை எனக்காகத் தாங்கள் வழிபடவேண்டும்.

"ஈண்டுநான் இருந்து இன்னுயிர் மாயினும
மீண்டுவந்து பிறந்து நன் மேனியைத்
தீண்டலாவதோர் தீவினை தீர்வரம்
வேண்டினுள்தொழு தென்று விளம்புவாய்."

என்று மங்கை சொல்லிய மாற்றம் கேட்டு, முனிவர் மனம் குழைந்து, கமலத்தை தன் அருள் நிறைந்த கண்களால் நோக்கி, "மாதே! உனது கணவனை விட்டகலாத காதலன் உயிரிழந்தான் என்று ஐயமற அறிந்த பின்னல்லவோ, இத்தகைய வரம் இறைவனிடம் பெறவேண்டும்! அவன் இருப்பின் நீ இறத்தலும் மீண்டும் பிறத்தலும் விரும்பத் தகாதனவன்றே!" என்று இனிய மொழிகளால் எடுத்துரைத்தார். தன் காதலன் உயிரோடிருக்கவும் கூடும் என்ற உரைகேட்ட மங்கை புதியதோர் ஊக்கம் பெற்று, மாதவ முனிவரை நோக்கி "ஐயனே! முக்காலமும் அறியவல்ல ஆன்றோர் என்று தங்களை அறிந்தோர் எல்லாம் போற்றித் தொழுகின்றார்கள். என் காதலன் எங்கேனும் வாழ்ந்திருக்கின்றான் என்று உறுதி சொல்வீர்களே யாயின், அதுவே எனக்கு இம்மை இன்பமும், மறுமை இன்பமும், ஆகும்' என்று எடுத்துரைத்தாள்.

அம்மெய்யுரை கேட்ட முனிவர், மனம் கரைந்து மங்கையின் மனத் தூய்மை கண்டு மகிழ்ந்து, கருணை பொழியும் கண்களால் கமலத்தை நோக்கி "மாதே! இங்கு உன் முன்னே தோன்றும் முனிவன் உருவிலமைந்த முருகனை அறியாது அவன் இறந்தான் என்று வருந்துவதாகுமோ" என்று மொழிந்து புன்னகை பூத்து நின்றார். மங்கையும் நொடிப் பொழுதில் முருகனைக் கண்டு எல்லைபற்ற இன்பதுற்று யாதும் பேச நாவெழாது நின்றாள்!

"இழந்தமணி புற்றரவெதிர்ந்த தெனலானாள்
பழந்தன மிழந்தன படைத்தவரை ஒத்தாள்
குழந்தையை உயிர்த்த மலடிக்குவமை கொண்டாள்
உழந்து விழிபெற்ற தொருயிர்ப் பொறையும் ஒத்தாள்."

நல்மணியை இழந்த நாகம் அம்மணியை அடைந்தாற் போலவும் பழம் பொருளை இழந்தவன் மீண்டும் அதனைப் பெற்றாற் போலவும், மகப்பேறில்லா மங்கை நன்மகவை ஈன்றாற்போலவும், கண்ணிழந்தான் மீண்டும் கண்ணொளி பெற்றாற்போலவும் கமலம் மனம் களித்தாள் அப்போது, முருகன் தான் எவருமறியாது நள்ளிரவில் பழயனூரினின்றும் போந்ததும், கமலத்தையன்றி மற்றொரு மாதை மணந்து இல்லறம் நடத்துவதினும் துறவறமே ஏற்ற நெறியென்றெண்ணித் தூய காவியுடை புனைந்ததும், நல்லூரின் நன்மக்கள் விரும்பியவாறு நாதனுக்கு வழிபாடு செய்ய இசைந்ததும், ஆகிய செயல்களை எல்லாம் விரிவாக எடுத்துரைத்துக் கமலத்தின் ஆசற்ற அன்பினை வாயாரப் புகழ்ந்து வாழ்த்தினான்!

அப்பால், மையறு மனத்தளாய மங்கையும் தன்னைனிலாத முருகனும் நன்னெறியில் வழுவாது நின்று இம்மையில் அடையப் பெறாத இன்பத்தை மறுமையிற் பெறக் கருதி நல்லூர்ப் பெருமானை நாளும் பணிந்து போற்றினார்கள்.




# இராமாயணமும் கந்தபுராணமும்

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

இராமாயண கதைக்கும் கந்தபுராணக் கதைக்கும் உள்ள ஒற்றுமையைக் காட்டத் தொடங்கி சென்ற மாத விதழில் முதற் பகுதியைக் காட்டினோம். இனி, மற்றைப் பகுதியையும் ஈண்டுக் காட்டுவாம்.

இராமாயணத்தில், அனுமான் இலங்கைக்குச் சென்று சீதாதேவியைக் கண்டு பேசிய பின் இராவணன்பாற் சென்று நல்லுரைகள் நவின்று, இலங்கையை எரியெழக் கொளுத்தி மீண்டானாக, இராவணன் தெய்வத் தச்சனைக் கொண்டு நகரைப் பண்டேபோலாக்கித் தன் மந்திரிகளோடிருந்து மேல் செய்யவேண்டிய காரியத்தைக் குறித்து ஆலோசிக்கின்றான். அப்பொழுது அவனது மந்திரிகளும் மற்றுமுள்ளோரும் இராமனைப் பொருது அழித்தலே செய்யத்தக்க காரியமென ஆலோசனை கூறுகின்றனர். அவன் தம்பியாகிய கும்பகர்ணனே அவர்களைத் தடுத்து இராவணனுக்கு நன்மதி புகட்டுகின்றான்.

"அண்ணா! சகல சாஸ்திரங்களையும் நன்றாகக் கற்றறிந்தும் பிறர் மனை விழைதலாகிய பெரும் பழிக்காளாகினை; தேவர்களை யெல்லாம் துன்பப்படுத்தினை; இது செயத்தகும் செயலோ? இவற்றின் பயனாகவே இப்பழி நேர்ந்தது. சீதையை இராமனிடம் சேர்த்துவிடுவதே நன்று" என்று கூறுகின்றான்.

கந்தபுராணத்திலும் வீரவாகு வீரமகேந்திரஞ் சென்று சயந்தனைக் கண்டு பேசிய பின், சூரன்பாற் சென்று நல்லுரைகள் நவின்று, அந்நகரை யழித்து மீண்டானாக, சூரன் பிரமனைக் கொண்டு நகரைப் பண்டேபோலாக்கித் தன் மந்திரிகளோடிருந்து மேல் செய்யவேண்டிய காரியத்தைக் குறித்து ஆலோசிக்கின்றான். அப்பொழுது அவனது மந்திரிகளும் மற்றுமுள்ளோரும் முருகனைப் பொருது அழித்தலே செய்யத்தக்க காரியமென ஆலோசனை கூறுகின்றனர். அவன் தம்பியாகிய சிங்கமுகனே அவர்களைத் தடுத்து சூரனுக்கு நன்மதி புகட்டுகின்றான்.

"அண்ணா! தேவர்களைத் துன்புறுத்தினை. சயந்தனைச் சிறையிட்டனை. இது சிட்டர் செயும் செயலாகுமோ! தேவர்களைச் சிறையினின்றும் விடுதலை செய்தலே உய்யும் நெறியாம்" எனப் புகல்கின்றான்.

இதனாலும் இவ்விரு சரிதைகளும் ஒத்திருத்தல் காண்க.

இராமாயணத்தில் கும்பகருணன் இராவணனுக்கு இதங் கூறியது போலவே விபீஷணன் என்னும் மற்றொரு தம்பியும் பற்பல நீதிகளை யெடுத்தோதுகின்றான். இராவணன் அவ்வுரைகளைச் செவிக்கொளாது கொல்வேன் எனக் கோபித்துக் கூறுதலும், அவ்விபீடணன் இராமன்பாற் சென்று சரணாகதி யடைந்து இராவணனுதியர் மாண்டபின் நீர்க்கடன் செய்கின்றான்.

அப்படியே கந்த புராணத்திலும் சூரன் மக்களு ளொருவன் இரணிய னென்பான் தன் தந்தைக்குப் பற்பல நீதிகளை யெடுத்தோதுகின்றான்.

தேவரை நாம்சிறை செய்த தன்மையால்
ஆவது பாவமே யாக்கம் வேறிலை
யாவையு முணர்ந்திடு மிறைவ திண்ணமே
போவது நம்முயிர் திருவும் பொன்றுமால்

என்று அவனெடுத்துரைக்கு மாற்றம் விபீஷணன் விளம்பும் உரையோ டொக்க நோக்கத் தக்கதாம். விபீஷணனை இராவணன் வெகுண்டு

அஞ்சினை யாதலி னமர்க்கு மாளலை
தஞ்சென மனிசர்பால் வைத்த சார்பினை
வஞ்சனை மனத்தினை பிறப்பு மாற்றினை
நஞ்சினை யுடன்கொடு வாழ்தல் நன்று

ஆகலின், விழியெதிர் நிற்றியேல் விளிதி. இன்னே என்னெதிர் நில்லா தோடிப்போ. இன்றேல் சாவாய் என விசைத்தது போலவே, சூரனும், இத மொழி கூறிய இரணியனை நோக்கி,

ஆற்றல் விட்டனை குலமுறை பிழைத்தனை அரசின்
ஏற்றம் நீங்கினை ஒன்னலர்க் கஞ்சினை யிசைத்தாய்
மாற்ற மொன்றினி யுரைத்தியேல் உன்றனை வல்லே
கூற்றுவன் புரத்தேற்றுவன் யான்

எனக் கொதித்துக் கூறுகின்றான். ஆனால், இரணியன் பகைவரோடு சேராது பொருது மீளுருக்கொண்டு கடலி லொளித்திருந்து சூரன் முடிந்தபின் அவனது நிலையைக் கண்டழுது நீர்க்கடன் செய்கின்றான்.

முதல் நாள் நடந்த போரில் இராவணன் தன் சேனைகளை யெல்லா மிழந்தது மன்றித் தானும் முடியிழந்து போர் செய்யு மாற்றலினறித் தனித்து நாணி நிற்கின்றான்.

அறங் கடந்தவர் செயலிதென் றுலகெலா மார்ப்ப
நிறங் கரிந்திட நிலம் விரல் கிளைத்திட நின்றான்
இறங்கு கண்ணின னெல்லழி முகத்தினன் தலையன்
வெறுங்கை நாற்றினன் விழுதுடை ஆலன்ன மெய்யன்

தீயவர்கள் அடையும் கதி இதுதான் என்று உலகத்திலுள்ளவர்களெல்லாம் ஆரவாரிக்கும்படி நிறங்கரிந்து கால் விரலால் தரையைக் கீரிக்கொண்டும் கைகளைத் தொங்கவிட்டுக் கொண்டும் விழுதுகளையுடையதோர் ஆலமரம் நிற்பது போல் இராமபிரான் எதிரில் தோல்வியுற்று நிற்கின்றான் இலங்கை வேந்தன். அப்படியே,

கந்த புராணத்தில் சூரனும் முதல் நாட் போரில், சேனைகளனைத்தையு மிழந்து தன்னந் தனியனாய்த் தலை நாணி நிற்கின்றான்,

தேரிழந்தனன் சிலையது மிழந்தனன் திறல்சேர்
பேரிழந்தனன் தானைக ளிழந்தனன் பெரும்பூண்
ஏரிழந்தனன் மவுலியுங் கவிகையு மிழந்தான்
பாரிழந்திடு மன்னர்போல் நின்றனன் படிமேல்

வெற்றி காணாது நிற்கும் வீரனாகிய இராவணனை இராகவன் நோக்கி "நிராயுத பாணியனாக நின்மேல் அம்பு தொடுத்தல் சரியன்று; இனியேனும் உன் பிழையை யறிந்து சீதையை விடுவையேல் பிழைப்பாய். நன்றாக யோசனை செய். போ. பொர விருப்பமிருப்பின் நாளைக்கு வா," எனக்கூறி விடுத்தது போலவே, குமாரப் பெருமானும் சூரனை நோக்கி,

ஈண்டு நின்புடை யீண்டிய இலக்கம் வெள்ளத்து
நீண்ட தானையும் நின்சிலை வன்மையும் நின்னால்
தூண்ட லுற்றிடு தெய்வப் படைகளும் தொலைந்து
மாண்டு போயது கண்டனை வறியனாய் நின்றாய்.

பன்னு கின்றதென் பற்பல விண்ணுளோர் பலரும்
துன்னு தொல் சிறை விடுத்தியேல் உன்னுயிர் தொலையேம
அன்ன தன்மையை மறுத்திடி னல்லை நாமடுதும்
என்னை சொல்லுவ தெண்ணங்க ளுரைத்தியால்

என்றியம்பியதாகக் கந்தபுராணம் கழறுதல் காண்க.

இராமாயணத்தில் இந்திரசித்தன் இலக்குவன் முதலானோரைப் பிரமாத்திர நாகாத்திரங்களால் பிணித்து வெற்றி கண்டதாகக் களித்ததை யொப்பக், கந்தபுராணத்திலும் பானுகோபன் வீரவாகு முதலானோரை மாயாத்திரங்களாற் பிணித்துக் கடலினும் மலையிலும் எறிவித்து வெற்றி யடைந்ததாகக் களித்து நிற்கின்றான்.

யுத்த காலத்தில் வானரர் இலங்கையுட் புகுந்து அதனைப் பாழ்படச் செய்ததுபோல, முருகனது சேனையைச் சேர்ந்தோராகிய பூதரும் யுத்த காலத்தில் சூரனது நகரை யழித்து ஆரவாரிக்கின்றனர்.

இந்திரசித்தன் முடிவில் இராமலக்குமணரின் பலபராக்கிரமங்களை யறிந்து அவர்களை வெல்லலரிதென்று கண்டு இராவணனிடஞ் சென்று சீதையைவிட்டு விடுமாறு அறிவுறுத்துகின்றான்.

ஆதலா னஞ்சினேனென் றருளலை ஆசைதானச்
சீதைபால் விடுதியாயி னவரவர் சீற்றந் தீர்வர்
போதலும் புரிவர் செய்த தீமையும் பொறுப்பருன்மேல்
காதலா லுரைத்தேன்

என்று, அன்பின் பெருக்கா லறைகின்றான். மைந்தனது மாற்றத்தை மனங்கொள்ளாது இராவணன் அவனை வெறுத்துப் பல சொற்கள் விளம்புகின்றான். வெறுப்புரை யேற்கப் பொறாத வீரன் "எந்தாய்! இந்திரசித்தன் இறந்தான் என்னும் சொல்லைக்கேட்ட பின்னரேனும் என்னுரை இன்னுரை யாதலைக் காண்பாய்" எனக் கூறிப் போர்க்களஞ் சென்று பொருது முடிகின்றான். அவ்வாறே,

ஸ்காந்தத்திலும், சூரன் மைந்தனும் பானுகோபன் வீரவேற் குமரனை வெல்ல தரிதென்று கண்டு தாதையை யணுகித் "தந்தையே!

உறுதி யொன்றினி மொழிகுவன் பொன்னக ருள்ளார்
சிறை விடுக்குதி நம்பிடைச் செற்றம தகற்றி
அறுமுகத்தவன் வந்துழி மீண்டிடு மதற்பின்
இறுதியில் பகல் நினைக்குநின் பெருவளம்"

என்று உறுதி மொழி யுரைக்கின்றான். சூரன் அதன் பொருளை ஆராய்ந் தறியாது அகங்கரித்துப் பேசலும் அவன் கோபத்தை யடக்கிச்சென்று அம ராடி யழிகின்றான்.

இந்திரசித்தன் இராமனிளவலால் பட்டதுபோலவே சூரன் மைந்தனும் முருகன் தம்பியாகிய வீரவாகுவால் வீழ்கின்றான்.

இராவணன் தன் தம்பியாகிய கும்பகருணனைத் தூக்கத்தினின்றும் எழுப்பச் செய்து போர்க்குச் செல்லுமாறு பணிக்கையில் அவன் தமயனுக் குப் பற்பல நீதிகளைப் பகர்கின்றான். "சீதையைச் சிறைவிடின் யாவரும் உய்வோம்; இன்றேல், இறத்தல் திண்ணம்" என்று பலவாறு இன்னுரைகளா வியம்புகின்றான். இராவணன் அவற்றைப் புறக்கணித்தலும் போர்க்குப் புறப்படுகின்றான். அவ்வாறே சூரனதிளவலாகிய சிங்கமுகன் ஆசுரமென் னும் அணி நகரினின்று மழைக்கப்பட்டுத் தமயனைக் கண்டு உற்ற செய்கை யெல்லா முணர்ந்து, உய்யு நெறியுணர்த்துகின்றான். தேவர்களைச் சிறை விடுமாறு கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகின்கிறான். சூரன் அச்சொல்லை மறுத் துக் கோபித்தலு மவன் சினந்தணித்து அமர்புரியப்போகின்றான்.

கும்பகருணன் சிங்கமுகன் என்னு மிவ்விருவர்தம் போரின் தன்மை கள் ஒரு படித்தாகவே யிருக்கின்றன. இருவரும் மலைபோன்ற பருத்த யாக் கை படைத்தோர். பகைவரது சேனைகளை கும்பல் கும்பலாக மடிந்தழியக் கொன்றனர். கும்பகருணன் வானரர் எறிந்த மலையை வாயிலிட்டு மென்று பொடிப் பொடியாக்கி யுமிழ்கிறான். அறுபட்ட கையை மற்றோர் கையால் எடுத்துக் கதாயதம்போல் சுழற்றி யெறிந்து வானரசைனியங்களை வதைத்த காட்சியைக் கண்டு விண்ணோரும் வியந்தனர். இருந்த கையினும் இற்ற கையே யாவர்க்கும் பேரச்சத்தைக் கொடுத்தது. இருவரும் பகைவர் சேனை களை இருகையாலள்ளி வாயிலிட்டு விழுங்கி நின்றனர். இவ்வாறு, போர் செய்யும் இவவிருவரும் அகக்கண்ணால் நோக்குவோர்க்கு ஒத்ததன்மையின ராய் விளங்குகின்றனர்.

அன்பர்களே! இத்துடன் இச்சிறு ஆராய்ச்சிக் கட்டுரையை முடிக்கின் றோம். மேற் காட்டிய விஷயங்களைத் தனித்தனியாக வெடுத்து ஆராய்ந்து இவ்வாராய்ச்சியால் பெறப்படுவ தென்ன வென்பதை யறிந்து கொள்ளுமாறு அவ்வேலையை யுங்களுக்கே விட்டு விடுகின்றோம். ஆனால், நீங்கள் எவ்வாறு ஆராய்ச்சி செய்து பார்க்கினும் இராமாயணக் கதையும் கந்த புராணக் கதை யும் ஒன்றினின்று மொன்று தோன்றியதோ வெனக் கருதுமாறு அவ்வளவு ஒற்றுமைப் பாடுடையனவா யிருக்கின்றனவென்னும் முடிவிற்கே வந்து தீர வேண்டும். இதனால் அவ்விரண்டும் பொய்க்கதைகளென்று நாம் கூறுவதாகக் கொள்ளாமல் அவ் விரண்டிற்கு முள்ள ஒற்றுமையை வற்புறுத்தவே இவ் வளவு இயம்பியதாகக் கொள்ளுமாறு மீட்டு மொருமுறை வாசகர்களை வேண் டிக் கொள்கின்றோம்.

# சிறுவர் விளையாட்டுக்கள்

(வீ· சங்கரையர்.)



## 21. ஹ்யூமரேஸ் டாக். (Humorous Tag.)

ஒருவன் மற்றவர்களை பிடிக்கச் செல்லவேண்டும். பிடிப்பதற்காக பக்கத்தில் வந்தவுடன் பையன்கள் ஒரு கையால் ஒரு காதையும் மற்றொரு கையால் ஒரு கால் விரலையும் பிடித்துக்கொள்ளவேண்டும். இப்படியிருந்தால் தொடக்கூடாது. அப்படி இல்லாமல் நிற்கின்றவனைப் பார்த்துத் தொட வேண்டும். தொட்டவனும், தொடப்பட்டவனும் இடம் மாறிக்கொள்ள வேண்டும்.

## 22. Good Morning. (குட்மார்னிங்.)

பையன்களை வட்டமாக நிறுத்தவும். ஒருவனை வட்டத்தைச் சுற்றிவரச் சொல்லவும். அப்பொழுது அவன் ஒருவனைத் தொடவேண்டும். தொடப்பட்டவன் எதிர்ப்பக்கமாகச் சுற்றி வரவேண்டும். இருவரும் சந்தித்தவுடன் முதல்வன் இரண்டாவனை நோக்கி 'குட்மார்னிங், ஸார், காலையில் ஏதாவது தேகாப்பியாசம் செய்தாயோ' என்று கேட்க வேண்டும். அவன் 'இல்லை' என்று சொல்லவேண்டும். உடனே முதல்வன் இரண்டாமவனை குனிந்து தண்டால், காலைப் பிடித்துக்கொண்டு தவளை மாதிரி தவ்வுகிறது முதலிய ஏதாவது ஒரு விளையாட்டைச் செய்யச் சொல்லியும் அல்லது காலை விரித்து நின்று கொண்டு வியாயாமம் செய்யவும் சொல்லலாம். அப்பொழுது இரண்டாமவனுடைய கால்களுக்கிடையில் கூடவோ அல்லது தாண்டிக்கொண்டோ ஓடி முதல்வன் இரண்டாமவனிடத்துக்குப் போகவேண்டும். பிறகு இரண்டாமவனும் இப்படியே செய்யவேண்டும்.

## 23. Diagonal staff run.

இரண்டு கக்ஷிகளாகப் பிரித்து ஒவ்வொரு கக்ஷியையும் இரண்டாகப் பிரிக்கவும்.

| | | |
|---|---|---|
| 1-வது கக்ஷியை A, B, | I-A | II-C |
| ஸ்தானங்களிலும் | 1—2—3—4 | 1—2—3—4 |
| 2-வது கக்ஷியை C, D, என்ற | 1—2—3—4 | 1—2—3—4 |
| ஸ்தானங்களிலும் நிறுத்தவும் | II-D | I-B |

I A 1-வனும், II C 1-வனும் தங்கள் கைகளில் சிறு தடியோ அல்லது பந்தோ வைத்துக்கொண்டு நிற்கவேண்டும். வாத்தியார் இந்த அடையாள

மிட்ட இடத்திலிருக்க வேண்டும். I A 1-வனும், II C 1-வனும், உபாத்தியாயர் உத்தரவு கொடுத்தவுடன் ஓடி முறையே I B 1-இடமும், II D 1-இடமும் கொடுத்துவிட்டு அந்த இடங்களி லிருக்கவும். அவ்விரண்டு பேர்களும் ஓடி 2-இடமும் கொடுத்து அப்படியே விளையாட்டுத் தொடங்கவேண்டும். எந்தக்கக்ஷிக்காரனுடைய கடைசி பையன் முதலில் ஓடிவந்து மத்தியஸ்தனிடம் வருகிறானோ அந்தக் கக்ஷியே ஜயித்தது. ஒருவனும் தடியோ, பந்தோ கையில் கிடைப்பது வரை இடம் பெயரக் கூடாது. அப்படி யாராவது நகர்ந்தால் மத்தியஸ்தன் அவனைத் திரும்பத் தன்னிடத்திற்குப்போய்ப் பிறகு ஓடும்படிச் செய்யவேண்டும். அதுவே அவனுக்கு விதிக்கவேண்டிய அபராதம்.

## 24. சுரங்கப்பந்து.

இரண்டு கக்ஷிகள் இரண்டு வரிசையாக ஒருவன் பின் ஒருவனாக குனிந்து நிற்கவேண்டும். உத்தரவு கிடைத்தவுடன் இருகக்ஷி முதல்வனும் பந்தை கால்களுக்கூடே அடுத்தவனிடமும் அவன் அடுத்தவனிடமும் அனுப்பவேண்டும். கடைசி பையன் பந்து கையில் கிடைத்தவுடன் முதலில் ஓடிவந்து முன்போல் பந்தை அனுப்பவேண்டும். எந்த கக்ஷி முதல்வன் மத்தியஸ்தனிடம் ஓடி வருகிறானோஅதுவே ஜெயித்த கக்ஷி.

## 25. மேல்பந்து.

சுரங்கப்பந்துபோலவே. ஆனால் குனியாமல் நிமிர்ந்து நிற்கவேண்டும். பந்தைத் தலைக்குமேலே கூட அனுப்பவேண்டும் என்பதே வித்தியாசம்.

## 26. நண்டு விளையாட்டு

டயகனல் ஸ்டாப்ரண் மாதிரியே. ஆனால் பந்தோ, தடியோ வேண்டாம். எல்லாரும் உட்கார வேண்டும். ஓடவேண்டாம் தவளையைப்போல் இரண்டு கைகளையும் இரண்டு கால்களையும் ஊன்றித் தவ்வி நடக்கவோ, அல்லது கைகளைக் கொண்டு கால்களைப் பிடித்துக்கொண்டு நண்டுபோல் செல்லவோசெய்ய வேண்டும்.

## 27. நோண்டி.

இரண்டுகக்ஷிகளில் ஒன்று ஒரு வட்டத்துக்கு உள்ளேயும் மற்றொன்று வட்டத்திலிருந்து சுமார் பத்து கஜ தூரத்திலுமாக நிறுத்த வேண்டும். வெளியே யுள்ளவர்கள் ஒவ்வொருவனாக நொண்டிக்கொண்டு வந்து வட்டத்துக்கு உள்ளே போய் அங்குள்ளவர்களைத் தொடவேண்டும். தொடப்பட்டவர்கள் வெளியேற வேண்டும். திரும்பத் தன்னிடம் போய்ச் சேரும்வரை கால்களை மாற்றிக்கொள்ளக் கூடாது. கால்களை மாற்றினால் மாற்றினவன் வெளியேற வேண்டும். வெளியேறினவர்களில் அந்த நொண்டியில் தொடப்பட்டவர்கள் மாத்திரம் வட்டத்திற்குள் போகவேண்டும். வட்டத்திலுள்ளவர்கள் பூராவும் வெளியேறுகின்ற வரையிலுமோ அல்லது வெளியிலுள்ளவர்கள் பூராவும் நொண்டி யடித்து கால் மாற்றியதினால் வெளியேறுகின்றது வரையிலுமோ விளையாட வேண்டும். பிறகு கக்ஷிகள் மாற்றிக்கொள்ள வேண்டும்.

## 28. Potato Race. (பொட்டாடோ ரேஸ்.)

இரண்டு கக்ஷிகளாகப் பிரித்து ஒவ்வொரு கக்ஷியிலும் பையன்களை ஒருவன் ஒருவனாக நிறுத்தவும். ஒவ்வொரு கக்ஷியினுடைய முன் புறமும் ஒவ்வொரு வட்டமும் அதனுள் எத்தனை பையன்கள் அக்கக்ஷியிலிருக்கிறார்களோ அத்தனை சிறு கற்களை வைக்கவும். அவ்வட்டத்திலிருந்து சுமார் 10-கெஜ தூரத்தில் முன் பக்கத்தில் ஒவ்வொரு வட்டமும் வரைய வேண்டும். வட்டங்கள் சுமார் 18-அங்குல விலாச முள்ளவைகளாக இருக்கவேண்டும். உத்தரவு கொடுத்த உடனே ஒவ்வொரு கக்ஷியிலு முள்ள முதல் பையன் முன் வட்டத்திலிருந்து ஒரு கல்லை எடுத்துக்கொண்டு ஓடி இரண்டாவது வட்டத்தில் போட்டு விட்டுத் தன் கக்ஷியின் பின் புறத்தில் போய் நிற்க வேண்டும். இரண்டாவது வட்டத்தில் கல்லைப்போட்டு திரும்பும்பொழுது அடுத்தவனைத் தொட்டு விட்டுப் பின்புறம் போகவேண்டும். அப்படித் தொட்ட பிறகே அடுத்தவன் இடத்தை விட்டுப் புறப்படலாம். எந்தக் கக்ஷியில் பூரா கற்களும் முதலில் இரண்டாவது வட்டத்தில் கொண்டு சேர்க்கப் படுகின்றனவோ அதுவோ ஜயித்த கக்ஷி.

## 29. பூனை வீட்டிலிருக்கிறதா?

எல்லாரும் வட்டமாகவும் ஒருவன் வட்டத்தினுள் கண்களைக் கட்டிக் கொண்டு மிருக்கவேண்டும். உள்ளிருப்பவன் ஒவ்வொருவரிடமும் சென்று, 'பூனை வீட்டிலிருக்கிறதா?' என்று கேட்கவேண்டும். உடனே அவன் 'மியா, மியா' என்று சொல்ல வேண்டும். அந்த சப்தத்திலிருந்து அவன் பெயரைச் சொல்லவேண்டும். சரியாகச் சொல்லிவிட்டால் இருவரும் இடம் மாற்றிக் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் அடுத்தவனிடம் சென்று மறுபடியும் 'பூனை வீட்டிலிருக்கிறதா' என்று கேட்க வேண்டும்.

## காபி தேவதையின் பூஜா வைபவம்



# காபி தேவதையின் பூஜா வைபவம்

(ஆரியூர்—வ. பதுமநாப பிள்ளை)

காலை வேளை. பார்க்கும் இடமெங்கும் பச்சைப் பசேலென்று செழித்து வளர்ந்துள்ள பலவகைச் செடி கொடிகளும் மரங்களும் விளங்கும் மனோகரமானதொரு பூஞ்சோலை. மரகதக் கம்பளம் பரப்பப்பட்டதே போன்ற பசும்புல்லின்மீது, ஆங்காங்கு படிந்திருந்த பனித்துளிகள் முத்துக்களையொத்து விளங்கின. காலை இளங்கதிரவனது பொன்னிறக் கிரணங்கள் பூங்கொடிகளின் மேல் பாய்ந்து பச்சைக் கொடிகளை பசும்பொற் கொடிகளாக மாற்ற முயல்வதுபோல் தோன்றியது. அச்சோலையின் நடுவிலே அமைந்திருந்த அழகியதொரு சலவைக்கல் மேடையின்மீது ஒரு தேவதையின் சிலை விளங்கியது. எட்டு கைகளுடன் கூடியதாய், ஓர் அரக்கனை இடது காலால் மிதித்துக்கொண்டிருப்பதுபோன்ற அச்சிலையைக் கண்டதும் காளி தேவியின் விக்கிரகமோ என்று எண்ணி, சற்று அஞ்சிப் பின்னடைந்தேன். உற்று நோக்கியபோது எனது எண்ணம் தவறு என்பதைஉணர்ந்து இச்சிலையை அணுகிக் கவனித்துப் பார்த்தேன்.

அச்சிலைக்கு எட்டுக் கைகள் இருப்பினும், அக் கைகளிலிருந்த பொருள்களைக் கண்டதும் பொங்கி எழுந்த சிரிப்பை என்னால் அடக்கிக்கொள்ள முடியவில்லையாதலின், விழுந்து விழுந்து சிரித்தேன். சூலம் இருக்கவேண்டிய கையிலே, சிறியதொரு கரண்டி யிருந்தது. படை யிருக்கவேண்டிய கையில், இரும்புச் சட்டி யிருந்தது. வில் இருக்க வேண்டிய கையிலே, சர்க்கரைப் புட்டி இருந்தது. அம்பு இருக்கவேண்டிய கரத்திலே, சிறு செம்பு இருந்தது. வாள் விளங்கவேண்டிய கையிலே காப்பிக்கொட்டைப் புட்டி இருந்தது. மணி இலங்கவேண்டிய கரத்திலே கோப்பையும் சிறு தேக்கரண்டியும் விளங்கின. அச்சிலைக்கு அணிவிக்கப்பட்டிருந்த துணி, மஞ்சள் நிறப் புடவையாக இல்லாமல் 'காபி கலர் சேலை'யாக விளங்கியது. அதன் மேனி களாப்பழத்தின் நிறமாக இல்லாமல், காப்பிக்கொட்டையின் நிறமாக இலங்கியது. அதன் முகம் சிவந்த நாக்கைத் தொங்கவிட்டுக்கொண்டு கண்டோரைக் கலங்கச் செய்யும் கடூரத் தோற்றம் உடைய முகமாக இராமல், எவரையும் எளிதில் வசீகரிக்கக்கூடிய புன்னகை தவழும் சுந்தர மோகன முகமாக விளங்கியது. நெற்றியில் செந்நிறக் குங்குமமோ வேறு எக்குறியோ இன்றி சூன்யமாக இருந்தது. ஆதலின் யான் கண்டது காளியம்மன் சிலை அன்று என்றும் 'காபியம்மன்' சிலையே என்றும் உறுதியாக உணர்ந்துகொண்டு விட்டேன். அடடா! 'காளியம்மனு'க்கும் 'காபியம்மனு'க்கும் திருப்பெயர்ப் பொருத்தம் எவ்வளவு அழகாக அமைந்திருக்கிறது பார்த்தீர்களா! காளியம்மனின் பக்தர்களைவிட காப்பியம்மனின் பக்தர்கள் உலகமெங்கும் கோடிக் கணக்காக இருந்துவருவதன் இரகசியம் என்ன என்பதைத் தெரிந்துகொண்டு

விட்டேன். ஆனால் அத் தேவதையின் இடதுகாலின்கீழ் உள்ள அரக்கன் எவனாக இருக்கக் கூடுமென்று நன்கு சிந்தித்துப் பார்த்தேன். சிந்திக்க சிந்திக்க என் மூளை குழம்பிற்றேயொழிய உண்மை விளங்கவில்லை. யாரேனும் ஒரு புலவர் 'காபிப் புராணம்' பாடி வைத்துப் போயிருந்தா லல்லவா, அவ்வரக்கனது செருக்கு காபியம்மனால் அடக்கப்பட்ட வைபவத்தை நான் தெரிந்துகொண்டிருக்கக் கூடும்! செந்தமிழ்ப் புலவர்களால் பாடப்பெறாதது, காப்பியம்மனுக்கு ஒரு பெருங் குறையே யல்லவா?

அக்சிலையின் காலடியின் கீழ் சிதறிக்கிடந்த பலவகைப்பட்ட வாடிய மலர்களைக் கண்டதும், அது கேவலம் அழகுக்காக மட்டும் அங்கு வைக்கப் பட்டிருக்கவில்லை என்பதும் விளங்கின! ஆதலால், அவ்விடத்திற்கு விரைவில் எவரேனும் வரக்கூடுமென்று சுற்றும் உற்றுப் பார்த்தேன். யான் நினைத்தவாறே பட்டைத் திருநீறு விளங்கும் நெற்றியுடனும் ருத்திராட்ச மாலை ஒளிரும் கழுத்துடனும் கூடிய 'சைவப்பழ'மான ஒரு பெரியார், தூரத்திலேயே இரு கரங்களையும் தலையின்மேல் கூப்பிக்கொண்டு தமது இனிய குரலில் பூபாள ராகத்தில் பின்வருமாறு திருப்பள்ளி எழுச்சி பாடிக்கொண்டே சிலையை நெருங்கி வந்தார்:

"கீழ்த்திசை வெளுத்தது; உதித்தனன் கதிரோன்;
கீசு கீசெனக் கத்தித் திரிவன பறவை;
தாழ்த்திடலின்றியே காலையில் பசுக்கள்
தம்மைத் தெருத்தொறும் கொணர்ந்தனர் இடையர்;
வாழ்த்தி வணங்குவோர்க்(கு) அருள் செயுங் 'காப்பி
மாதாவே! எங்களை ஆனந்தக் கடலுள்
ஆழ்த்திடுவாய்! எங்கள் அயர்வகற்றிடுவாய்!
அன்னையே! பள்ளி எழுந்தருளாயே!";
"தலைப்பகை மத—சாதிப் பகைகளை மறந்தோம்;
காலையில் எழுந்ததும் உன்னையே நினைந்தோம்;
அலைமயிரினரொடுங் 'கிராப்' தலையினரும்
அன்பொடு கலந்திங்கு குலவியே மகிழ்ந்தோம்;
சொலும் உனைக் காலையும் மாலையும் தொழுதோம்;
சோர்வை ஒழித்திடும் காபியாம் அம்மே!
தலைவலி அரக்கனைத் தாளினால் அடக்கும்
தாயே இனிப் பள்ளி எழுந்தருளாயே!"

இரண்டாங் கவியின் கடைசி அடி எனது செவிகளில் விழுந்தவுடனே, அரக்கன் இன்னான் என்பதை அறிந்துகொண்டுவிட்டேன்.

பின்னர் அந்த சைவப் பெரியார், அருகில் நின்றுகொண்டிருந்த என்னைப் பார்த்தும் பாராதவரே போன்று, அச்சிலையை (இல்லை; மன்னிக்கவும்)— அத்தேவதையைச் சுற்றி ஏழு பிரதட்சணங்கள் வந்தபின் தரையில் வீழ்ந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார். அதன் பின் அவ்விடத்திற்கு ஒருவர் பின் ஒருவராய் இருபது இருபத்தைந்துபேர் வந்து சேர்ந்தனர். அந்த பக்தர்கள்

எல்லோரையும் பார்க்கப் பார்க்க யான் அடைந்த ஆச்சரியம் எத்தகையது என்பதை எழுதிக்காட்ட முடியாது. சிவாலயத்தில் நீங்கள் காணும் பக்தர்களில் நூற்றுக்கு எண்பது நபர்கள் விபூதி தரித்தவர்களாகவும், பெருமாள் கோயிலில் காணப்படும் அன்பர்களில் நூற்றுக்கு எண்பது நபர்கள் திருநாம மிட்டவர்களாகவும் இருப்பது இயல்பேயன்றோ! ஆனால் காபியம்மன் சந்நிதானத்தில் கூடிய அன்பர்களில், நெற்றியில் மதக்குறி அணிந்தோர் ஐந்தாறு நபர்களே இருந்தனர். மற்றவர்களெல்லாரும், செயற்கைச் சின்னங்களால் தங்களது முகத்தின் இயற்கை யழகு குறைந்துவிடும்' என்னும் எண்ணம் கொண்டவர்கள் போலும்! 'அமெரிக்கன் கிராப்' 'ஸம்மர் கிராப்' முதலிய பல வகைப்பட்ட 'கிராப்கள்' செய்துகொண்ட சிரத்தினர் முதல், மூன் குடுமித் தீட்சிதர் உச்சிக்குடுமி கனபாடிகள் முதலிய பரம வைதிகர்கள் வரையில் பலவகைப்பட்ட அன்பர்களும் ஒருங்கே கூடியிருக்கும் காட்சி, பெருவியப்பைப் பெருக்குவது இயல்பேயல்லவா? அவர்கள் மட்டுமா? மகமதிய சகோதரர்களும் கிறிஸ்தவ சகோதரர்களுங்கூட அக்கோஷ்டியில் கலந்துகொண்டிருந்தனர்! அக் காட்சியை நோக்க நோக்க, 'பற்பல ஆண்டுகளாக பேரார்வத்துடன் எதிர்பார்க்கப்பட்ட 'பூரண சுயராஜ்யம் பெற்றுக்கொண்டு விட்ட சுதந்திர இந்தியாவிலேயே இருக்கிறோம்' என்று என் மனத்திற்குள் எண்ணிக்கொண்டு விட்டேன்.

அக் காப்பித் தொண்டர்களுள் குங்குமப் பொட்டோடு கூடிய பட்டை விபூதி ருத்ராட்ச மாலைகள், 'பஞ்சகச்சம்' வைத்துக் கட்டிய மடிப்பட்டு முதலிய வைதிக அலங்காரங்களோடு கூடிய சாஸ்திரிகள் ஒருவர், தமது வேலைக்காரனை அழைத்து, "சூர்யோதயமாகி இவ்வளவு நேரமாகியும், இன்னும் பணத்திமிர் மிகுந்த பாற்காரர்கள் வரக்காணோம். உடனே அவர்களிடம் போய், அவரவர்களது பசுக்களை ஓட்டிக்கொண்டு சீக்கிரம் இங்கு வந்து சேரும்படி நான் சொன்னதாக ஒவ்வொருவன் வீட்டிலும் போய்ச் சொல். வாடிக்கைக்காரருடைய பசுக்களெல்லாம் இங்கு வந்து கறந்தால் கூட, இரண்டு மூன்று குடங்கள் பால் கிடைப்பது கூட கஷ்டம். ஆதலால், ஊரில் எந்த எந்த வீட்டில் பசுமாடு கறக்கிறதோ, அந்தந்த வீட்டில் கிடைக்கும் பால் முழுவதையும் வாங்கிச் சேர்த்து, நாலைந்து குடங்களுக்குக் குறையாமலாவது கொண்டு வந்து சேர். ஜல்தி! ஜல்தி!! போனேன், வந்தேன் என்று சுருக்காக வந்து சேரவேண்டும்"—என்று கட்டளை யிட்டார். அவ்வேலையாளும் 'அப்படியே, சாமி!' என்று சொல்லிப் போனான்.

அவன் சென்ற சிறிது நேரத்திற்குப் பின், ஏழெட்டு மனிதர்கள் தத்தம் பசுக்களை ஓட்டிக்கொண்டு வந்து சேர்ந்தனர். அவர்களுள் பொற்காப்புகள் பூண்ட கைகளும் கலர் 'சில்க்' சுற்றப்பெற்ற தலையும் உடையவர்களாய் மெல்லிய 'மல்' ஷர்ட்டுகள் அணிந்திருந்தவர்களது பசுக்கள் மட்டும் நல்ல சதைப் பற்றுடன் கூடியனவாக இருந்தன. சற்று ஏழைகளாகத் தோன்றிய மற்றவர்களது பசுக்கள் இளைத்து எலும்புக் கூடுகளைப்போல் தோன்றின. 'எப்பொழுது தத்தம் தாய் மடியில் வாய் வைப்போமோ' என்ற பேராவல் மிகுந்தவைகளாய்த் தோன்றிய கன்றுக்குட்டிகள் அப்பசுக்களைச் சுற்றிச் சுற்றி வந்த காட்சி மிக்க பரிதாபகரமான காட்சியாக இருந்தது. அந்தோ! ஈன்றெடுத்த தமது கன்றுகள், தமது பாலைப் பருகுவதற்கின்றி கயிறுகளால் பின்னப்பட்ட வாய் மூடியால் கட்டப்பட்டு, தங்களெதிரிலேயே ஏங்கித் தவித்து நிற்பதைக்

கண்ட பசுக்கள், அவற்றை நோக்கிய நோக்கம், அன்புடையோர் உள்ளத்தைப் பெரிதும் உருக்குவதாக இருந்தது. வைக்கோல் திணிக்கப்பெற்று தோலால் மூடப் பட்டிருந்த உயிரற்ற உருவங்களும், கன்றுகளாகக் கொண்டுவரப் பட்டிருந்ததைக் கண்டதும் எனது கண்களில் நீர் பெருகி வழிந்தது. காப்பித் தொண்டர்களுள் ஐந்தாறு பேர் பசுக்களருகில் வந்து நின்றுகொண்டு, விரைவில் பால் கறக்குமாறு பாற்காரர்களுக்குக் கட்டளையிட்டனர். அப் பசுக்களின் மடிக்காம்புகள் நான்கிலும் கடைசிச் சொட்டு வரும் வரையில் பால் முழுவதையும் கறந்துகொண்டு விட்ட பாற்காரர்கள், தாங்கள் கறந்த பாலை எடுத்துக்கொண்டு காப்பி தேவதை யருகில் சென்றனர். அவர்கள் எழுந்த மறு கணமே தத்தம் தாய் மடிக்காம்புகளை பேராரர்வத்தோடு சுவைக்கத் தொடங்கிய எளிய கன்றுகள், மிகுந்த ஏமாற்றமடைந்து பெரிதும் தவித்தன. அத் தவிப்பைக் கண்டு அகம் இரங்குவதற்கு அங்கு யார் உளர்?

சாஸ்திரிகள் அனுப்பிய வேலைக்காரனும் மற்றொருவனும் ஒவ்வொரு பாற்குடம் எடுத்துக்கொண்டு வந்து தோன்றினர். குடத்தைக் கீழே இறக்கி வைத்த வேலையாள், சாஸ்திரிகளை நோக்கி, "ஊருலே ஊடு ஊடா அலைஞ்சேன் சாமி! செத்த மீசுரமான கைகாரங்களெல்லாம் அவுங்க அவுங்க ஊட்டுலே காப்பி வைக்காத்துக்கே பால் போதலே, வெலக்கி குடுக்க முடியாது இன்னுட்டாங்க. ஊட்டுச் செலவக்கு கய்டமா இருக்குதுன்னு அஞ்சாறு ஊட்டுக்காரங்கதான் இந்த பாலை குடுத்தாங்கோ. அவங்க ஊட்டுலே கூட பச்செப் பாலவன்வோ, வீறு வீறு இன்னு கத்திக்கினு இருந்ததெக் கேக்க கேக்க எங்களுக்கு ரொம்ப பரிதாவமா இருந்தது. அவுங்க பட்ர கய்டம் பொறுக்க முடியாமே, பாலவன்னுளுக்குக் கூட வச்சிக்காதே எல்லாப் பாலையும் குடுத்துட்டாங்க போலிருக்குது. நாங்க வாணும்னு வந்தூட்டுருப்போம். எசமான் கோச்சிக்கிவாங்களே என்னு வாங்கிக்கினு வந்தூட்டோம்"—என்றான்.

"போதும் நிறுத்து உன் பேச்சை! வர வர என்னிடம் உனக்கு பயமே இல்லாமல் போய்விட்டது! உன்னைச் சொல்லக் குற்றமில்லை; காலம் கெட்டுக் கிடக்கிறது. வேலைக்காரப் பயல்களுக்கு இவ்வளவு அதிகப் பிரசங்கமா? உன்னை அப்புறம் பார்த்துக் கொள்கிறேன்"—என்றார் சாஸ்திரிகள். பாவம்! அதற்குமேல் அவரெதிரில் நிற்கப் பெரிதும் அஞ்சிய அவ்வெளியவன், அவ்விடத்தை விட்டுப் போய்விட்டான். அக்குடங்கள் இரண்டும் தேவதைக்கு அருகில் வைக்கப்பட்டன.

காப்பி தேவதையின் அர்ச்சக சுவாமிகள், அக்குடங்களிலிருந்த பாலை மொண்டு எடுத்துப் பரீட்சித்துப் பார்த்தார். அப்பால், 'நீர் கலந்த பாலாக' இல்லாமல் 'பால் கலந்த நீராக' இருந்ததைப் பார்த்துச் சிரித்தார். உடனே அவர்,

" மேலில் திரிந்தாய் மேகப் பெயர் பெற்றாய்;
ஞாலத்(து) இழிந்தாய் நன்னீர்ப் பெயர் கொண்டாய்;
மாலொத்த மாயம் வல் ஆயர் கைப்பட்டு
பாலென்ற பேரும் படைத்தாய் வெண் தண்ணீரே! "—

என்ற ஒரு கவியை எடுத்துச் சொல்லி, காப்பி தேவதையின் விஷயத்தில்

கொஞ்சமும் அஞ்சாமல் இடையர்கள் செய்து வரும் படுமோசங்களை கூடிய விரைவில் ஒழிக்கப் பாடுபட வேண்டியது, காபி யன்பர்களது மதக் கடமைகளுள் தலைசிறந்ததாகும் என்று வலியுறுத்திப் பேசினார். 'இவ்விரண்டு குடப்பாலும் தேவிக்கு உகப்பாக இராது'-என்றுரைத்து, அவற்றைத் திருமஞ்சனத்திற்கு உபயோகிக்க ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார். எதிர்பார்த்த படி கிடைக்காமையால், தேவியின் திருமஞ்சனத்திற்குப் போதுமளவு பால் கிடைக்கவில்லையே என்று வருந்திக் கொண்டிருந்த காபியடியார்களுக்கு, அவ்விரண்டு குடங்களையும் அவர் ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டது மிக்க வருத்தத்தைத் தந்தது. அவர்களில் நாகரிகத் தோற்றமுடைய ஒருவர், அர்ச்சக ஸ்வாமிகளை நோக்கிப் பின்வருமாறு கூறலானார்:—

"காபிதேவி நமது பக்தியை விரும்புபவளேயன்றி, கேவலம் பாலின் தன்மையை ஆராய்ந்து பார்க்க விருமபுபவள் அல்லள். அவளது சாந்நித்யம் நிறைந்துள்ள இடங்களாகிய கிளப்புகளிலே, காலை முதல் அடுப்பிலேயே காய்ந்துகொண்டிருக்க வேண்டிய பாலிலே, அவ்வப்போது தண்ணீர் விடாமலிருந்தால், நமது அன்பர்களை நள்ளிரவு பத்து மணி வரையில் எப்படி திருப்தி செய்ய முடியும்? நாம் காபியைக் கவனிக்க வேண்டுமேயன்றி; எப்படிப்பட்ட பாலாக இருந்தாலும் அதைப்பற்றி நமக்கு என்ன கவலை? பக்தியோடு ஸமர்ப்பிக்கும் எதுவும் தேவிக்கு உவப்பாகவே இருக்குமென்பது உறுதியாதலால், தாங்கள் மனங்கோணாமல் இங்குள்ள எல்லாக் குடங்களின் பாலையும் தேவிக்குத் திருமஞ்சனம் செய்யுங்கள்—" என்றார். அவ்வாறே செய்யுமாறு ஏனையோரும அர்ச்சகரை வேண்டிக்கொண்டனர்.

பின்னர், அர்ச்சகஸ்வாமிகள் கம்பீரமான உச்சஸ்வரத்தில் ஸம்ஸ்க்ருத மந்திரங்களைச் சொல்லிக்கொண்டே காபியம்மன் சிரசில் பாலைக் கொட்டத் தொடங்கினர். அடடாவோ அடடா! என்ன அற்புதம்! என்ன அற்புதம்!! காபியம்மனின் சிரசில் விழுந்த பால், அத்தேவியின் கரங்களிலுள்ள காப்பிக் கொட்டை சர்க்கரை முதலிய பொருள்களின் மேல்பட்டு, காப்பியாகவேமாறி-அடிகளின் கீழ் அருவிபோல ஓடத் தொடங்கியது. ஒரு சேர் காபியைப் பருகிவிட்டு இன்னொரு சேர் கொண்டுவரச் சொன்னால் அருகிலுள்ளவர்கள் தம்மை அநாகரிகர்கள் என்று பரிகசிப்பார்கள் என்னும் எண்ணத்தால் ஒரு சேரோடு எழுந்திருந்துவிட நேர்வதைப்பற்றி பெரிதும் வருந்திக்கொண்டிருந்தவர்களும், வீட்டில் வைக்கப்படும் காபி குடும்பத்திலுள்ள குழந்தைகள் முதல் முதியோர் வரை பலருக்கும் பங்கிடப்பட்டு விடுவதால் ஒரு டம்ளருக்குமேல் பருகுவதற்கின்றி வருந்தியவர்களும் மற்றும் பற்பலரும், அருவியாக ஓடும் காபியைக்கண்டு மட்டற்ற ஆர்வமுடையவர்களாய் வாரி வாரிப் பருகலாயினர். எப்படி ஹோட்டல்களில் எச்சிலைக் கவனியாமல் சின்னஞ்சிறு தட்டுகளில் காபியை ஊற்றி உறிஞ்சிச் சுவைத்தார்களோ, அவ்வாறே 'எச்சில்' என்ற நினைவே இன்றிப் பெருகியோடும் காபியை எல்லோரும் அள்ளி அள்ளிக் குடிக்கலாயினர். 'கலத் தண்ணீருக்கு தோஷமில்லை' என்பது பழமொழி யல்லவா? சிறியதாயினும் பெரியதாயினும் ஓடிக்கொண்டிருக்கும் அருவி அருவிதானே! ஓடிக்கொண்டிருக்கும் அருவியில் எச்சில் பாராட்டுபவர்கள், பைத்தியக்காரர்களாக பரிகசிக்கப்படுவார்க ளல்லவா? சாதி—மத—பேதம் கடந்தவர்கள், உண்ணும் உணவிலும் பருகும் நீரிலுங்கூட ஒற்றுமையாக நடந்துகொள்ள வேண்டாமா? காபியன்பர்களெல்லோரும் கடல் கடை

யாமலே கிடைத்த அமிர்தமாகிய காபியை, வயிறு நிரம்புமளவும்—ஏன்?—கழுத்துக்குமேல் வெளிவந்து விடாமல் நிற்குமளவுங் கூட—ஆசை தீரப் பருகி ஆனந்தம் அடைந்தார்கள்.

பின், காபியம்மனுக்கு திவ்யாலங்காரங்கள் செய்யப்பட்ட பின் வருமாறு அர்ச்சனை செய்யலானார்:—

ஓம் ஸர்வஜன மனோஹராயை நம:
ஓம் க்ஷீராம்ருத ஸம்பவாயை நம:
ஓம் பூலோக ப்ரத்யக்ஷாம்ருதாயை நம:
ஓம் அஷ்ட புஜாயை நம:
ஓம் த்விகால பூஜிதாயை நம:
ஓம் வர்ண மதபேத த்வம்ஸின்யை நம:
ஓம் மஹா நகராதி க்ராமாந்த ஸர்வஸ்தல நிவாஸின்யை நம:
ஓம் மஹா மதுராயை நம:
ஓம் மஹா ஸுகந்தாயை நம:
ஓம் மஹோத்ஸாக வரப்ரதாயை நம:
ஓம் சிரோரோக நிவாரணாயை நம:
ஓம் காபி தேவ்யை நம:

பின்னர், தீபாராதனை வெகு விமரிசையாக நடைபெற்றது. காபி மதத்தினராகிய அடியார்கள் எல்லோரும் பின் வருமாறு ("மாங்காய்ப் பாலுண்டு மலைமேல் இருப்போர்க்குத் தேங்காய்ப் பாலேதுக்கடி"—என்னும் குதம்பைச் சித்தர் பாட்டின் மெட்டில்) காப்பிச் சித்தர் ஒருவரால் பாடப்பெற்ற கீதத்தை 'காபிராகத்'திலே பாடலாயினர்:—

(1) காப்பி யமிர்துண்டு காலையும் மாலையுங் கை
கூப்பியே தொழுகின்றோம்—எந்தாயே!
குளிர்ந்தருள் புரிவாயே! (காப்பி)

(2) காலையில் எழுந்ததும் கருத்தில் உனைப் பதித்து
மாலையுந் துதித்திடுவோம்—எந்தாயே!
மகிழ்ந்தருள் புரிவாயே! (காப்பி)

(3) சாதிமதக் கலைகள் தம்மாற் பிணங்காமல்
நீதி ஒற்றுமை பெற்றோம்—எந்தாயே!
நீங்கிற்று பகைப்பேயே! (காப்பி)

(4) நாகரிகர்களோடு நாட்டு வைதிகர்களும்
ஏகமாய்க் குலவிடவே—எந்தாயே!
இன்னருள் பொழிவாயே! (காப்பி)

அவ்வாறு அவர்கள் காபி தேவதையைத் தோத்திரம் செய்து கொண்டிருந்த இடத்திலே, கிழிந்த உடையும் குழி விழுந்த கண்களும் கொண்டு

எலும்புக்கூடு போன்று மெலிந்த தேகம் உடையவர்களாய் ஏழெட்டுப் பேர் வந்து சேர்ந்தனர். காப்பிதேவதையைக் கவனித்துப் பார்த்தவுடனே அவ்வெளியவர்களுக்கு எத்தகைய உணர்ச்சி தோன்றியதோ, அவர்களது விழிகளிலிருந்து நீர்பெருகி வழியலாயிற்று. அவர்களுள் கன்னெஞ்சையும் கரைக்கக்கூடிய பரிதாபகரமான தோற்றமுடைய ஒரு மாது, பின்வருமாறு காப்பித் தொண்டர்களை நோக்கிப் பேசலானாள்:—

"இங்கே நீங்கள் எல்லோரும் காப்பியைத் தெய்வமாகக்கொண்டு பூசை பண்ணுகிறீர்கள்! ஐயோ! பாழுங் காப்பிக்கொட்டையைப் பயிர் செய்கிற தோட்டங்களில், நாங்கள் படுகிறபாடு தெரியுமோ? கவலை தெரியாத காப்பிக் குடியர்களே! நீங்கள் காப்பியையா குடிக்கிறீர்கள்? தோட்டக்காரர்கள் எங்களைப் படுத்தும்பாடு சகிக்க முடியாமல், நாங்கள் விட்ட கண்ணீர் பட்டு ஊறியுள்ள கொட்டைகளின் ரசத்தை யல்லவா குடிக்கிறீர்கள்! உங்கள் உடம்பிலே இந்திய ரத்தம் ஓடவில்லையா? தங்கை தமக்கைகளிடம் உங்களுக்கு இரக்கம் இல்லையா? பாழும் வயிற்றின் கொடுமை பொறுக்க முடியாமல் தானே, நாஙகள் காப்பித் தோட்டங்களில் வாடித் தவிக்கிறோம்! உங்களுடைய காப்பிப் பைத்தியம் ஒழிந்து போய்விட்டால், பாழுங் காப்பித் தோட்டங்களில் எங்களை மானங்கெட்ட வாழ்வு நடத்தும்படி செய்கிற கொடுமையும் நீங்கி விடுமல்லவா? ஏழைகள் படுகிற பாடுகளில் இரக்கம் காட்டாமல், பணக்காரர்களாக கூடிக்கொண்டு காப்பி குடித்து சந்தோஷப் படுவதாலேயே 'சாதி—மத—வேற்றுமை பார்க்கவில்லை' என்று சொல்லிக் கொள்வதில் உங்களுக்கே வெட்கமில்லையா? 'ஒருவேளை காப்பி தவறிவிட்டால் தலை வலிக்கிறது' என்னும் நீங்கள், எங்களுக்கு ஒருவேளை கூழுக்காவது வழி காட்டக் கூடாதா? நாங்களும் உங்களைப்போல, தமிழ்நாட்டில் பிறந்தவர்களல்லவா? எங்கள்மேல் சிறிதும் மனம் இரங்காதபடி, பாழுங் காப்பிப் பேய் உங்களது மனத்திலிருந்து கருணையையே ஓட்டி விட்டதா? இனியாவது, நாங்கள் மானங்கெடாதபடி வாழவேண்டாமா?—"

அப்பேச்சைக் கேட்ட காப்பித் தொண்டர்கள் அனைவரும், பதில் கூற வழியின்றி பதுமைகளைப்போல அசைவற்று நின்றனர். அச்சமயத்தில், திடீரென ஒப்பற்றதொரு அற்புதப் பேரொளி தோன்றியது. பின், அச்சுடரொளியிலே ஒப்புயர்வற்ற பேரழகுடைய ஒரு தேவியின் உருவம் விளங்கியது. மின்னலைப் போன்று தோன்றிய அவ்வொளி மறைந்தவுடனே, அதில் காட்சியளித்த தேவி காப்பித் தொண்டர்களிடம் வந்து நின்றாள். காலை இளங் கதிரொளியால் மலர்ந்து இலங்கும் செந்தாமரையையும், அக் கமல மலரில் அமர்ந்து செந்தேன் பருகும் இந்திர நீல நிற வண்டுகளையும், தண்ணொளி வாய்ந்த இன்னமுத கிரணங்களைப் பொழிந்து வான வீதியில் புன்னகை புரிந்து உலவுங் குளிர் மதியையும் இன்னமுதம்கொண்டு ஒருங்கு திரட்டி அமைக்கப்பெற்றது போன்ற திருமுகமுடைய அத்தேவி, காபி யம்மனின் சிலையையும் காபி யடியார்களையும் கூர்ந்து நோக்கினாள். பின், அத்தொண்டர்களைப் பார்த்து பின்வருமாறு பேசலானாள்:—

"பேதைகாள்! நீங்கள் போற்றுவது ஒரு தெய்வமல்ல; அது உங்களை விரைவில் மடிவிக்கக்கூடிய கொடிய பேயே என்பதை உணருங்கள். ஆங்கில காட்டிலிருந்து இங்குவந்து குடியேறிவிட்ட அப்பேய், உங்களது அறிவை

மயக்கி பலத்தை தளர்த்தி உங்களைத் தனக்கு அடிமைப் படுத்திக்கொண்டு விட்டதை நினைக்க நினைக்க, தமிழ்த் தாயாகிய என் மனம் குமுறுகின்றது. உஷ்ணப் பிரதேசமாகிய இத்தென்னாட்டில் உள்ளவர்கள் காலையில் குளிர்ந்த மோரைப் பருகுவது ஏற்றதாகுமேயன்றி, சுடச் சுடக் காப்பியைக் குடிப்பது எவ்விதமும் பொருந்தாது. உதர நாராயணனைக் காலையில் குளிரச் செய்ய வேண்டியதே உங்கள் கடமையாயிருக்க, அதற்குப் பதிலாக காலை வேளையில் காப்பியைக்கொண்டு சுடுவிப்பது பெரும் பாவமாகும். இதோ எலும்புக் கூடுகளைப்போல நிற்கும் எளியவர்கள் சொரிந்த கண்ணீர், உங்களைச் சும்மா விட்டுவிடப் போவதில்லை என்பதை உணர்ந்துகொள்ளுங்கள். எனது சிந்தைக்கினிய மோகனதாஸ் காந்தி என்ன அறிவுறுத்தியுள்ளார் தெரியுமோ?

"காபியானது இரத்தம் முறிந்து தண்ணீர்போல் இலேசாகி விடும்படி செய்து விடுகிறது. காபியில் என்ன குணம் இருந்தபோதிலும், துர்க்குணம் அதிகமாக இருப்பதால், அற்பகுணம் நிரம்ப துர்க்குணத்திற்கு ஈடாக மாட்டாது. பிராணதாரமான இரத்தத்தை முறித்துவிடும் ஒரு வஸ்துவை விட்டு விட யோசனையும் வேண்டுமோ?"

இப்பொன் மொழிகள், உங்களது ஹிருதயத்திலே ஊடுருவிப் பாயட்டும். காப்பியை விட்டு விடுவதால், தலைவலியோ மயக்கமோ வந்துவிடுமென்று நீங்கள் அஞ்சவேண்டுவதில்லை. அவ்வாறு நீங்கள் நினைப்பது வீண் பிரமையேயன்றி வேறன்று. நீங்கள் மட்டும் மன உறுதிகொண்டு விட்டால், உங்களை அப்பேய்க்கு அடிமைப்படுத்திக்கொண்டு விட்டிருப்பதிலிருந்து சொற்ப தினங்களிலேயே விடுதலை அடைந்து விடலாம். காபி பானத்தால் ஜாதி—மத பேதங்களைப் பாராட்டாமலிருந்து வருவதாக நீங்கள் பெருமையடித்துக் கொள்வதை நினைக்க நினைக்க, எனக்குச் சிரிப்பு மிகுகின்றது. கேவலம் கலந்து உண்ணும்முறை ஒன்றாலேயே உண்மை ஒற்றுமை உண்டாகி விடாது. காப்பி ஓட்டலின் வாயிலைத் தாண்டியவுடனே உங்கள் ஒற்றுமை எங்கே ஓடி ஒளிந்துகொண்டு விடுகிறது? தாய்நாட்டுத் திருத்தொண்டில் காட்டும் ஒற்றுமையே உங்களையும் உய்விக்கும்; எனையும் மகிழ்விக்கும். இனியேனும், நீங்கள் எல்லோரும் காபிப் பேய்க்கு அடிமைப்பட்டிருக்கும் கோழைத் தன்மையை உதறித் தள்ளிவிட்டு, எனது சிந்தையைக் குளிர்விக்கக்கூடிய தாய்நாட்டில் அன்புடைய வீரப் புதல்வர்களாக முயல்வதாக எனக்கு உறுதிமொழி அளிப்பீர்களாக."

அன்னையின் அருள் மொழிகளாலும் கரையப் பெறாத கல்லினுங் கொடிய வன்னெஞ்சுடைய காப்பித் தொண்டர்கள் யாவரும் தலையைக் குனிந்துகொண்டு நின்றனரேயன்றி, ஒருவரும் உறுதிமொழிகூறத் துணிந்து முன்வரவில்லை. அதைக்கண்டு என் மனம் பெரிதும் பதைத்தது; கண்கள் சிவந்தன; ஏதோ ஒரு அற்புத சக்தி, என்னையும் அறியாமல் எனது இருதயத்தில் ஒருவித புத்துணர்ச்சியை எழுப்பியது; எனது தமிழ்த்தாயின் திருவடிகளில் சாஷ்டாங்கமாகப் பணிந்து எழுந்து நின்று கூறலானேன்:—

"அன்னையே! உனது அருள் மொழிகளைக் கேட்டும், இக்கோழைகளின் காப்பிப்பித்து நீங்கியபாடில்லை. உனது அருள் மொழிகளால் யான் கொண்டிருந்த காப்பிப் பற்று என் மனத்தைவிட்டுப் பறந்துபோய்விட்டது. தாயே! இதோ கேள்! வீரர்கள் விளங்கிய பாரத நாட்டின்மேல் ஆணை! நீலத்திரைக்

கடல் ஓரத்திலே நின்று நித்தம் தவம் செய்யும் குமரியின்மேல் ஆணை! கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் பெருமான்மேல் ஆணை! சாந்தம் மிகுந்த காந்தியடிகள்மேல் ஆணை! எண்ணிறந்த மன்னர் மன்னர்களும் இன்கவிப் புலவர்களும் ஏத்திப் போற்றிய உனது திருவடிகள்மேல் ஆணை! இனி எக்காலத்திலும்—எவ்விடத்திலும்—எவ்வித காரணங்களை முன்னிட்டும் பாழும் காப்பியைப் பருகவே மாட்டேன். அதைக் கண்களால் காண நேர்ந்தாலுங்கூட, எனது இரு கண்களையும் இறுக மூடிக்கொண்டு விடுவேன். கள்ளுக்கடை எதிரில் தேசியத் தொண்டர்கள் சாத்வீக மறியல் செய்ததுபோல், நானும் சில தொண்டர்களைச் சேர்த்துக்கொண்டு காப்பிக்கடையின் வாயிலில் நின்றுகொண்டு சாத்வீக மறியல் செய்ய உறுதிகொண்டு விட்டேன். 'கள்ளுக்கடை மறியலைக் காட்டிலும், காபிக் கிளப் மறியல் நாட்டின் முன்னேற்றத்திற்கு அத்தியாவசியமானது' என்பதை காந்தியடிகளுக்கும் இராஜகோபாலாசாரியாருக்கும் தெரிவிக்கப் போகிறேன். கலியுக மாய சூர்ப்பணகையாகிய காப்பி யாக்கியின் மேல் தமிழ்நாட்டினர் கொண்டுள்ள பெருமோகத்தை விரைவில் ஒழிக்க முயலும் திருப்பணியிலே, என் உடம்பில் கடைசிச் சொட்டு இரத்தம் தங்கியிருக்கும்வரையில் உற்சாகத்துடன் உழைக்க உறுதி கொண்டேன். செந்தமிழ்த் தாயே! எனது நோக்கம் இனிது நிறைவேறத் திருவருள் புரிவாய்! இனி, உனது சிந்தை குளிர்ந்து என்னை ஆசீர்வதித்தருள்வாய்!"—என்றுரைத்து மீண்டும் சாஷ்டாங்கமாக தமிழ்த்தாயை நமஸ்கரித்தேன். அந்தோ! மறுகணத்தில் யான் கண்ட காட்சிகள் யாவும் மறைந்தன.

"நன்றாருக்கு; இப்படியும் தூங்குவாளோ? காலை வெய்யில் மேலே படரதுகூடத் தெரியாமே தூக்கம் வேண்டியிருக்கா?"—என்று புன்முறுவல் தவழும் முகத்தினளாய் எதிரில் நின்ற என் மனைவி கூறினள். அம்மொழிகள் எனது செவிகளில் விழுந்த பின்பே நான் கண்டவை யனைத்தும் கனவென உணர்ந்தேன். "வயிறு பசிக்கிறது; காபி போட்டிருக்கிறாயோ இல்லையோ?"—என்று கேட்டுக்கொண்டே எழுந்தேன். "நன்றாருக்கு, இன்னக்கி உங்கள் அப்பா சிரார்த்தமாச்சே, அதைக்கூட மறந்தூட்டேள்போலிருக்கு" —என்று கூறிக் கல கலவென்று சிரித்தாள் என் சுந்தரி. "போடீ போ! என் வயிற்றுப் பசி எனக்குத் தெரியும்! சிரார்த்தம் ஆனால்தான் என்ன? இந்த அறையில் நாம் இருவருந்தானே இருக்கிறோம்! நான் இரகசியமாக ஒரு டம்ளர் காபியைக் குடித்து விடுவதைக் கண்டுபிடிப்பதற்காக, அப்பா பிதுர் லோகத்திலிருந்து குதித்து வந்துவிடப் போகிறாரா என்ன? அல்லது, சாத்தியிருக்கும் கதவைத் திறந்துகொண்டு, சாஸ்திரிகள்தான் இங்குவரத் துணிந்து விடுவாரா என்ன?"—என்றேன் நான்.



சந்தாதாரர்களுக்கு:—சந்தா நெம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின்மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.



# இயற்கை யின்பம்.

(" இளங்குமரன்.")

இயற்கை! இயற்கை! இவ்வுலகில் எங்கு நோக்கினும் இயற்கைக் காட்சியே இன்பமளிக்கிறது. மாசு மறுவற்ற நீல நிற வானம் மக்களுள்ளத்தில் மகிழ்ச்சியை எழுப்பும். அவ்வானத்தில் இறைக்கப்பட்ட வைரக் கற்களென ஒளிவிடும் மீன் கூட்டங்கள் பார்ப்பவர் மனதிற்குப் பரவசமளிக்கும். பெரிய மரங்களும் சிறிய செடிகளும் பசிய கொடிகளும் படர்ந்துள்ள மலைகளின் தோற்ற மாண்பை என்னென்று வருணித்துக் கூறுவது?

மக்கள் வாழ்க்கைக்கு மனவமைதி வேண்டற்பாலது. மனவமைதியிலேயே அறிவின் தெளிவு அமைந்துள்ளது. அறிவு தெளிந்தால் மக்களால் தத்தம் வினைகளைச் செவ்வனே செய்ய வியலும்.

மனிதன் இவ்வுலகில் ஏன் பிறந்தான்? நாள் முழுவதும் உழைத்துப் பொருள் தேடி, உண்டு, உடுத்து வீணே இறந்துபடுவதற்கேயோ? இல்லையில்லை. பின் எதற்கு? தன் அறிவின் துணைகொண்டு இறைவனுடன் ஒன்றித்து இன்பமடைவதற் கன்றோ? அங்ஙனமாய இன்பத்தை அடைய வேண்டுமானால் மனிதன் மனவமைதி கொண்டு அறிவின் தெளிவு பெறல் வேண்டும். அறிவின் தெளிவிலேயே ஆண்டவன் காட்சி அமைந்துளதென்று அறிஞர் சாற்றியுள்ளனர்.

மனவமைதி யாண்டுக் கிடைக்கும்? இயற்கை நலஞ் செறிந்த இடமெங்கோ ஆண்டு மனவமைதியைப் பெறலாகும்.

பழங்காலத்தில் இறைவனைக் காண எண்ணங் கொண்ட முனிவர்கள் காட்டுக் கோடியது ஏன்? இதை நாம் சிறிது சிந்திப்போமானால் உண்மையை உணருவோம்.

நாடு, நகரம் என்பன மனிதனின் இணையற்ற செயற்கைத் தொழிலால் இயன்றவையாம். காடோ அங்ஙனமன்று. இறைவனின் இன்கருணையால் இயற்கையிலமைந்தது என்போம். மனிதனது செயற்கைக் காட்சி சிறிது நேர இன்பமே பயப்பது. இறைவனது இயற்கைக் காட்சியோ காணுந்தோறும் காணுந்தோறும் உள்ளக் கிளர்ச்சியை யுண்டாக்கிக் குன்றா மகிழ்ச்சியைக் கொடுப்பது; மனவமைதியைத் தரவல்லது. இக்காரணத்தினாலேயே

மனவமைதிபெற எண்ணியோர் இயற்கை நலஞ் சிறந்த காட்டுக் கோடினர்; ஓடுகின்றனர்.

மலர்களின் வருணங்கள் எத்தனை விதம்! அவற்றின் மீதுள்ள வேலைத் திறத்தை எந்தத் தாவர வல்லுநனால் அறியக்கூடும்? அவற்றின் வண்ணங்களை எந்தச் சித்திரக்காரனால் கண்டுபிடிக்க வியலும்? நறுமண வகைகளை எவராலாவது பிரித்து மொழிய முடியுமா? அவற்றின் பின்னல்களையும், பொருத்துக்களையும், அடுக்குகளையும் எந்த நெய்தல் வேலைக்காரன், எந்தத் தையல் வேலைக்காரன் பிரித்துக் கூட்டுவான்? அவற்றினின்று துளிக்கும் தேனின் சுவையானது இத்தனை விதமென்று பிரித்துச் சொல்லவல்லவன் யார்?

காய், கனிகளின் தன்மைகளையும், ஆகும், ஆகாதென்பதையும் எந்த மருத்துவன் எடுத்துக்கூறி வரையறுக்க மாட்டுவான்? தும்பிகள், வண்டுகள் முதலானவைகளின் பிரிவுகளை எத்தனை யென்று உறுதி செய்ய முடியுமா? அவற்றின் வரிச் சிறைகளை எந்தெந்த மாதிரி யென்று தெரிந்து கொள்வது? வைரமென ஒளிவிடும் சில சாதிவண்டுகளின் வண்ண விநோதங்களை எந்த மொழி கொண்டு வருணிப்பது? அவற்றின் பொற்பூச்சு, பளிங்குப் பூச்சுக்களைப்போல் எந்தச் சித்திரப் பூச்சுக்காரனால் பூச முடியும்? அலர்ந்துள்ள மலர்களில் தாவிச் சுழன்றிடும் அவ்வண்டுகளின் தொழிலை என்னவென்று மதிக்கலாம்? அவைகளின் ரீங்கார ஒலிக்கு எந்த இசை முன்னிற்கும்?

பறவைகளின் உருவ வேறுபாடுகளைத் தெரிந்துகொள்ள யார் திறமை பெற்றிருக்கிறார்கள்? அவற்றின் இறக்கைகளில் தோன்றும் மின்மினிப் பென்ன! கலாபங்களென்ன! தூபிகளென்ன! கழுத்தில் தோன்றும் வான வில்லின் சாயலைப் போன்ற வரிவடிவுகளென்ன! கொண்டைகளின் விநோதமென்ன! கால்களின் நிறங்களென்ன! இவற்றையெல்லாம் யாரால் பிரித்துரைக்கவியலும்? அவற்றின் ஆட்டங்களையும், அசைப்புக்களையும், ஊஞ்சலாடுந் தன்மையையும் எந்த நாட்டியக்காரன் கணக்கிட்டெழுதுவான்? அல்லது எந்தத் தேவதாசி ஆடிக்காண்பிப்பாள்? அவைகளில் ஆணும் பெண்ணும் கூடி ஒற்றுமையாய் வாழ்வதைப்போல் எந்தத் தலைவன் தலைவியிருக்க முடியும்?

இங்ஙனமே இறைவனின் எண்ணிறந்த படைப்புக்களின் அதிசய,வேறுபாடுகளைக் கூர்ந்து நோக்க நோக்க நமது உள்ளத்தில் சிந்தனை யூற்றுப்பெருக்கெடுத்து ஓடுவதைக் காண்போம். அதிலிருந்து நமது அறிவு விரிவடைந்து இறைவனின் காட்சியில் விழைவு கொள்வோம். அவ்விழைவு நம்மை இறைவனின் இன்னடிக்கு ஈர்த்துச் செல்லுமென்பதில் ஐயம் யாதுளது? மனிதன் இக்காட்சியில் இன்புறுதற் கல்லது இவ்வுலகில் எதற்குத் தோன்றினான்? மனிதனே! விழிப்படைக! எங்கணும் பரந்துள்ள இயற்கைத் தோற்றங்களைக் கண்குளிர நோக்குக! இயற்கையில் இன்புறுக! இறைவனைக் கண்டிடுக!

# அலைகடல் அணங்கின் அரும்பெரு மாண்பு.



(கருவேலி. ப. வீரப்பதஞ்சை ராயர் ஆக்கியது)

மன்னுபுகழ் நிலமகட்கு வாய்த்தநெடும் ஆடையெனத்
துன்னுமெழிற் சாகரப்பேர் தோகாய்! நின் பெருமையெலாம்
உன்னுதற்கும் அரிதானால் உரைப்பதற்கோ எளிதாகும்?
அன்னாய் நின் புகழ்பாடி அகமகிழ்ந்து போற்றுதுமே.

பகரரிய உயிர்களுக்கும் பயிலிடமாய் நீயிருப்பச்
சகரருனைத் தோண்டியதால் சாகரப்பேர் தரித்தாயே.
காரிடத்து நீருதவுங் கருணையுளங் கொண்டிலையேல்
பாரிடத்துத் தவம்அறங்கள் பயிலுதலும் உண்டேயோ.

மாறுபடக் கூறுநெறி மதங்கள்பல வாயிடினும்
வேறறவும் மதங்கள்செலும் விழுப்பொருளொன் றேயதுபோல்
குன்றிழிந்தும் மலையிழிந்துங் குலவுநதித் திரள்உலகில்
சென்றிழிந்து வழங்கிடினும் சேரிடம் நீ யொன்றாய்.

பார்மகளின் பலவுறுப்பாய்ப் பலபுலத்து மனிதரொன்று
நேர்வதற்கும் பல பொருளும் நிலவுதற்கும் கலமியங்கத்
தண்மையெனுங் குணத்துருவாம் சாகரப்பே ரன்னாய்நீ
வண்மையுளங் கொண்டிலையேல் மாநிலத்து வழங்குறுமோ.

நீசுருக்க மடைந்தாலும் நிறை யுயிர்கள் வறந்தொழியும்
நீபெருக்க மடைந்தாலும் நின்மயமே நிலவுலகாம்
ஆதலினால் மண்ணுலகம் ஆவதுவும் அழிவதுவும்
மேதகை!நின் வயத்ததென விளம்புவது மிகையாமோ.

அண்டமெலாம் இறுதிபெறும் அந்நாளில் அவற்றையெலாம்
கொண்டல்வணன் தன்வயிற்றிற் கொண்டனைத்து மேற்றுயில
நின்றநிலை திரியாமல் நீயிருப்பா யாதலினால்
உன்றனது தனியாற்றல் உரைப்பாலின் அமைவதுவோ.

அள்ளியுடன் அருந்துமவர்க் கருமுவர்ப்பாய்த் தனதியல்பை
உள்ளிநலங் கொள்ளுமவர்க் குணும்பனிநீ ருதவல்
புறந்தொழுபுல் லறிவினர்க்குப் பொருந்துமியல் புணர்த்தாமல்
திறந்தெரியும் அவர்க்குணர்த்துந் தேவனருள் மாறுவதே.

காத்தலெனுந் தொழிற்குரிய கடவுளரும் உனதிடத்தே
பூத்தஎழிற் றிருமகளைப் பொருந்துசுவை முதிர்ச்சியினால்
மேலுமவட் கிணையநலம் விழைந்தனது மருங்கணைந்தோர்
ஆலிலையின் அளவொடுங்கி அறிதுயில்யோ காற்றுவனே.

மந்தரத்தை மத்தாக்கி வாசுகியை நாணாக்கி
அந்தரத்துக் கடவுளரும் அவுணர்களும் தாங்கடைய
புத்தமுதம் நீயளிப்பப் புரந்திலையேல் வானவர்கள்
நித்தரெனும் நிலையினராம் நீள்விசும்பில் நிலவுவரோ

ஆக்குதலும் வல்லாய்நீ அமுதனைய அரும்பொருளும்
காக்குதலும் வல்லாய்நீ கரந்திடலும் வல்லாயே
எத்தொழிற்கும் வல்லவளாய் எந்தாய்நீ யிவணிருப்ப
முத்தொழிற்கும் மூவருண்மை மொழிந்திடலோ மிகையாமே.

# புதிய மாறுதல்

(கதி.)

நீங்கள் திருவேங்கடத்தையங்காரைப்பார்த்தால் அவர் ஐயங்கார்தான் என்று சொல்ல முடியாது. கிராப்புத் தலையும், பாழ்நெற்றியும், தட்டாடையுமாக 40-வயதுள்ள ஐயங்கார் ஒருவரை எங்கேயாவது காட்டுங்கள், பார்க்கலாம்! சில ஐயங்கார்களுக்கு நெற்றியிலே நாமத் தழும்புகளாவது இருக்கும்; அவைகூட திருவேங்கடத்தையங்காருக்கு இல்லை. ஊருக்குள் அவர் பெரிய மிராசுதாரராக இருந்திராவிட்டால் வைஷ்ணவர்கள் நிறைந்த அந்தக் கிராமத்தில் அவர் 'நிர்ப்பந்தம்' 'கட்டுப்பாடு' ஒன்றும் இல்லாமல் காலம் தள்ளமுடியுமா?

நமது ஐயங்கார் துரை வீதித்திண்ணையில் ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்து கிடப்பது வழக்கம். அவர் கணக்கு வழக்கு எழுதுவது பிறரோடு சம்பாஷிப்பது எல்லாம் அந்தச் சாய்வு நாற்காலியில் இருந்து கொண்டுதான். கணக்கு எழுதுவதற்கு அவர் தொந்தி வயிறே சாய்வு மேஜையாக உதவும். அந்தத் தொந்தி அவர் ஒரு சாய்வு மேஜையை வாங்காதபடி உதவி செய்து வந்ததற்காக ஐயங்கார் அதை அடிக்கடி தடவிக்கொடுத்து நன்றாகப் போஷித்து வந்தார். அவர் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருக்கும்போது எவர் பேச வந்தாலும் கீழே இருந்து கொண்டுதான் பேச வேண்டும். எல்லோரும் அவருக்கு மரியாதை செய்யவேண்டும். அவர் மட்டும் எச்சிற் கையில் காக்காய் ஓட்டமாட்டார்.

இப்படிப்பட்ட பாராசாரிக்குத் தலைமட்டும் மிகச் சிறுத்திருந்தது. அதில் மூளையோ களிமண்ணோ, யார் கண்டவர்கள்? நீங்கள் எதுசொன்னாலும் அவருக்கு விளங்காது, எவராவது ஒன்றைச் சொல்லும்போது கண்ணைப் பாதி மூடியபடி நெற்றியைச் சுருக்கிக்கொண்டு கேட்பார். அவரிடத்திலிருந்து பதிலைப் பெறுவதற்குள் பத்துக் காதம் போய்விட்டுத் திரும்பி விடலாம். சில சமயங்களில் அவர் சீட்டாட்டத்தில் கலந்து கொள்வார். அவருடைய வரிசை வரும்போது ஏழு எட்டு முற்றுப்புள்ளிகளைப் போட்டுவிட வேண்டியதுதான். கீழிருக்கும் சீட்டுக்களைப் பார்ப்பார்; தன் கைச் சீட்டுக்களைப் பார்த்துக் கொள்வார்; ஆட்டக்காரர்கள் ஒவ்வொருவர் முகத்தையும் பிறகு பார்ப்பார்; யோசித்து ஒரு சீட்டை உருவுவார். மறுபடியும் முற்றுப்புள்ளி. அந்த

உருவின சீட்டு பழையபடி கைச்சீட்டுடன் சேர்ந்து கொள்ளும். பக்கத்தில் உள்ளவர்கள் கொல்லென்று சிரித்துவிட்டால் வந்துவிடும் கோபம். அதற்காக எல்லோரும் துணியால் வாயைத் தடவிக் கொடுப்பதுபோல் சிரித்துக் கொள்வார்கள். ஆட்டத்தில் உள்ளவர்கள், 'எவ்வளவு நேரம், சார்' என்றால் பதில் வராது. கொஞ்சநேரத்தில் ஒரு சீட்டுக் கீழே போடுவார். உடனே வேறு எண்ணம் தோன்றி அதை எடுக்கப் போவார். ஆனால் சகாக்கள் அதை எடுக்க அவரைவிட மாட்டார்கள்—பார்த்தீர்களா! ஐயங்கார் மூளையை !!

நான் ஒருநாள் ஐயங்காருடன் பேசிக்கொண்டிருந்தேன். அதற்கு மூன்று தின நாள்தான் அவர் சென்னைக்குச் சென்றுவிட்டுத் திரும்பி யிருந்தார். பெரிய பட்டணத்தைப் பார்த்திராதவர் பார்த்து வந்திருக்கிறாரே, பட்டணத்தைப்பற்றி என்ன அபிப்பிராயம் கொண்டிருக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டு மென்றுதான் நான் அவருடன் பேசச் சென்றிருந்தேன். "பட்டணம் எப்படி யிருக்கிறது!" என்று மெதுவாக வாயைக் கிளப்பி விட்டேன். அவர் கொஞ்சநேரம் மௌனமாக என்னைப் பார்த்துவிட்டுப் பேச ஆரம்பித்தார். "என்ன ஐயா, மதராஸ் மதராஸ் என்று நீங்கள் எல்லாம் சொல்லிக்கொள்ளுகிறீர்களே; ஒரு நாள்தான் போய்ப்பார்த்து வரலாமென்று போயிருந்தேன். சீ! அது ஒரு பறைச் சீமை என்பது தெரியாமல் போச்சு, மட்டு மரியாதை தெரியாத இடம். நான் ஒருநாள் ட்ராமில் போய்க்கொண்டிருக்கையில் ஒரு பறையன் வந்து எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்தான். இன்னொரு 'அடாஸ் பேர்வழி' புகை என்முகத்தில் படும்படி ஒரு பீடியைப் பிடித்துக் கொண்டிருந்தான். இந்த ஊராக இருந்திருந்தால் நான் அவனை என்ன செய்திருப்பேன் தெரியுமா? இதோ பாருங்கள்! இந்த வழியாகப் போகின்றவர்கள் எல்லாம் என்னைப் பார்த்துவிட்டால் விரிந்த குடைகளைக்கூட மூடிவிடுகிறார்கள்" என்று ஐயங்கார் பல்லைக் கடித்துக்கொண்டு பேசினார்.

"இந்த ஊரில் ஒரு சிறிய குமாஸ்தாவுக்குக்கூட ஜனங்கள் பயப்படுகிறார்கள்; சென்னையில் பெரிய கலெக்டரைக்கூட மதிப்பதில்லை. பணக்காரன் ஏழை எல்லாரும் அங்கே ஒன்றுதான்" என்றேன் நான். என்மேல் அவருக்குச் சற்று வெறுப்புத்தான். நான் அவருடன் சேர்ந்து ஒத்துப்பாடி யிருந்திருக்கவேண்டும். நான் அப்படி செய்கிறவன் அல்லவே. ஐயங்கார் கோபம் என்னை ஒன்றும் செய்யாது என்பதை நான் நன்றாக அறிவேன். இன்கம்டாக்ஸ் ஆபீஸ் குமாஸ்தாவைக் கடிந்துபேச அவருக்குத் தைரியம் இல்லை.

வேறொரு சமயம் அந்தக் கிருபண சிகாமணியுடன் சம்பாஷிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அவரும் நானும் புராண இதிகாசங்களைப்பற்றிப் பேசி வந்தோம். "என்ன, சார், தள்ளுங்கள் குப்பையில்; அவை எல்லாம் பொய்ப் புராணங்கள், காசு பணம் பிடுங்குவதற்குச் சிலர் செய்த புரட்டு" என்றார் அவர். காந்திஜீயின் தியாகத்தைக் குறித்தும் கதரியக்கத்தின் சிலாக்கியத்தைக் குறித்தும் மேன்மையாகப் பேசினார். "எங்கள் வீட்டில் எல்லோரும் கதரைத்தான் கட்டுகிறோம்" என்று அவர் சொன்னபொழுது எனக்குண்டான மகிழ்ச்சிக்கு அளவே யில்லை. 'கீழ் ஜாதியார்' என்று கருதப்பட்ட ஒரு பிரிவினரிடத்தில்மட்டும் அவருக்கு வெறுப்பில்லாமல் இருந்திருந்தால் அசல் சுயமரியாதைக்காரர் என்று அவரைச் சொல்லிவிடலாம். புராணங்களும் சாஸ்திரங்களும் பொய்யல்லவென்று நான் அவ

ரிடம் சாதித்துப் பார்த்தேன். அவர் என் சொற்களை ஏற்றுக்கொள்பவரா கக் காணவில்லை. ஓர் ஐயங்கார் இந்தமாதிரி ஒழுக்கம் தவறியிருப்பது எனக் குப் பிடிக்கவில்லைதான். என்ன செய்வது?

வேறொரு தடவை நான் புங்கனூர் செல்லவேண்டி யிருந்தது. அப் பொழுது என் நண்பர் ஐயங்காரைச் சந்தித்துப் பேச அவர் வீட்டிற்குச் சென்றிருந்தேன். வீதியில் சாய்வு நாற்காலியைக் காணோம்! "எஜமான் எங்கே" என்று வாசலில் இருந்த வேலைக்காரனைக் கேட்டேன். "சுவாமி பூசைபண்றார்" என்று அவன் சொன்னான். அவ்வார்த்தைகள் என்னைத் தூக் கிப் போட்டாற்போல் இருந்தன. "கர்ம சண்டாளனுக்குப் பூஜையாவது புனஸ்காரமாவது? இது என்ன ஆச்சரியமாக இருக்கிறதே!" என்று நினைத்து எப்படியும் அவரைக்கண்டு பேசிவிட்டுத்தான் போகவேண்டு மென்ற தீர்மானத்துடன் திண்ணையில் உட்கார்ந்து கொண்டேன்.

சற்று நேரத்துக்குள் உள்ளே இருந்து ஒருவர் வந்தார். வந்தவர் உடலில் துவாதச நாமங்கள் பட்டை பட்டையாகப் பிரகாசித்தன. துளசி மணி மாலை கள் ஒரு டஜனுக்குமேல் அவர் கழுத்தில் தொங்குகின்றன. உச்சிக் குடுமி யும், இரண்டு நாளைக்கு முன் சலவைசெய்து தோய்த்து உடுத்திய சீமைமல் பஞ்சகச்சமும், ராமா, கிருஷ்ணா என்ற திவ்ய நாமஸ்மரணமும் என்னை மயக்கி விட்டன. வந்தவர் திருவேங்கடத்தையங்கார்தாமா, அல்லது அவ ரைப்போன்ற வேறு ஆசாமியா? நான் கனவுதான் காண்கிறேனா? இல்லை; அவர் திருவேங்கடத்தையங்காரேதான். சாய்வு நாற்காலி அங்கு இல்லாததன் ரக சியம் இப்பொழுது எனக்கு விளங்கியது. அதன் கான்வாஸ் அவருக்குத் தடையாக இருந்திருக்கவேண்டும் என்று அறிந்து கொண்டேன். "ஸ்வாமி கள், வரணும்; இப்படி எள்றதுதானே" என்று அவர் கூறினார். என்னை வழக் கமாக ஸர் பட்டம்வைத்து அழைக்கும் ஒருவர் புதிய வேஷத்துடன் 'ஸ்வாமி கள்' என்று அழைத்ததைக் கேட்டு என்னை அறியாமல் நான் சிரித்து விட் டேன்.

"ஸ்வாமி சிரிப்பது தெரிகிறது. இந்த ஆத்மா இப்பொழுது மாறிவிட் டதைப் பார்த்துச் சிரிக்கிறீர்கள். நீங்கள் கூறியதை எல்லாம் மறுத்துப்பேசின காலம் ஒன்றிருந்ததே; அதற்காக ஸ்வாமி சிரிக்கத்தான் செய்யும்" என்று சொல்லி அவரும் சிரிப்பில் கலந்து கொண்டார்.

"அவ்விடம் இப்படியாக வேண்டு மென்றுதான் அடியேன் பிரார்த்தித் துக்கொண் டிருந்தேன்" என்று நான் கூறினேன். கதையை அதிகமாக வளர் க்க இஷ்டமில்லை. சுருக்கமாகக் கூறிவிடுகிறேன்.

ஐயங்காரின் புதிய மாறுதலுக்குக் காரணம் இன்னதென்று உங்களுக்குத் தெரியவில்லையே! காந்திஜீ, "ஹரிஜனங்களுக்கு ஆலயப்பிரவேசம் அனுமதிக் கப்பட வேண்டும்" என்று ஓர் இயக்கம் தொடங்கிய பிறகு தோன்றியது இந்த மாறுதல் என்பதை அன்று அவருடன் சம்பாஷித்ததால் தெரிந்து கொண்டேன்.



# ஆள்வாரா? ஆழ்வாரா?

(பண்டித. இராமசுப்பிரமணிய நாவலர்.)

ஒவ்வொரு மொழியிலும் காணக்கிடப்பனவாய சொற்கள் தொன்று தொட்டே வழக்கில் இருந்து வருவனவாகும். அவற்றுள், பெரும்பாலனவும் மொழி தோன்றுங் காலத்துளவானவும் சிறுபான்மைய பின்னர்த் தோன்றியனவுமாம். காலந்தொறும் பொருள்கட் கேற்ற சொல் அமையா வழியும் பலபாடை மாக்கள் ஓரிடத்துத் தொக்கவழியும் புதுவன வாய்த் தோன்றும் சொற்களும் உள. அவை, 'கடி சொல்லில்லை காலத்துப் படினே' என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய சூத்திரத்தான் அமைவன. இங்ஙனம் வழங்கி வரும் சொற்குழூவினை வடிவுதிரித்து வழங்குதலும் உண்டு. வடிவு திரியப் பெறினும் பொருள் பெரும்பாலும் வேறுபட்டு நிகழாது. பொருள் வேறுபடின், அத்தகையன பல பொருளொரு சொல்லாய்ப் பேணப் படும் இலக்கணத்தவாம்.

இப்பெற்றிமை உணராதார் பலரும் இக்காலத்து நூல் செய்ய முன் வந்து பெரிதும் மொழிகளை இழுக்குறச் செய்கின்றனர். பத்திரிகைகட் குக் கட்டுரை வரைவோர் பலரும மொழிகளின்கண் பரந்த பயிற்சியின் றியே சிறிது சொற்களை ஒருங்கு திரட்டக் கற்றவக்கண்ணே தம் கைவந்தன வற்றை எழுதி உய்க்கின்றனர். பயில்வார் பலரும் மொழிவல்லுந ரன்மை யான், அவரது போலியுரையை மெய்யெனக் கொள்கின்றனர். அங்ஙனம் கோடலான் சொற்களின் மெய்ம்மை இதுவென உணராது தவறுபட உணர் வாராகின்றனர். இதனான் வரும் இழுக்குப் பெரிதா மென்க. பத்திரிகை நடாத்துவோர் இதன்கண் கருத்துடையராய் இருப்பின், மொழிகள் பெரி தும் தூய்மையுற்று மிளிரும் என்பதன்கண் ஐயப்பாடு இன்றாகும்.

சிலர், 'ஆழ்வார்' என்னும் சொல்லை 'ஆள்வார்' என எழுதி வருகின்ற னர். 'சோழன்' என்னுஞ் சொல்லைச் 'சோளன்' என்று எழுதி வருவது போன்று 'ஆழ்வார்' என்பது 'ஆள்வார்' எனவும் எழுதப் படலாம் என்று சிலர் கருதுகின்றனர். 'சோழன்' என்னும் தமிழ்ச்சொல் வடமொழியில் 'ழ' கர மின்மையால் 'சோளன்' என எழுதப்பட்டு வருகின்ற நுணுக்கம் உண ராது பன்னெறியிற் பிதற்றுதற்கு மருந்து காணேம். சிலர், 'சோளன்' என் பது வடசொல் எனவும் அதனைத் தமிழர் 'சோழன்' என எழுதி வருகின்ற னர் எனவும் கூறுப. அது முடிவு போகாமை, 'வழங்குவ துள்வீழ்ந்தக் கண் ணும்' என்னும் குறளின் குறிப்பில்,

> 'தொன்றுதொட்டு வருதல் சேரசோழ பாண்டிய ரென்றாற்போலப்
> படைப்புக் காலந்தொடங்கி மேம்பட்டு வருதல்.'

எனப் பரிமேலழகர் கூறினமையான் அவ்வரசர் மூவரும் தொல்லைத் தமிழ் நாட்டுக் குடியினரென்பது பெறப்படலானும் அவர் தமிழ்க்குடியின ராகலான் குடிப்பெயர் வட சொல்லாதல் இயைபு படாமையானும், தென்னாட்டுக் குடிக

ளாய அவர் பெயரை வடமொழியாளரும் அங்ஙனமே கொண்டு தம் மொழிக்கு இயைபுற எழுதியும் இசைத்தும் வந்தன ரென்பதற்கே இடந்தரு கின்றமையானும் அறியப்படும். இனிப் 'பிரவாளம்' என்னும் வடசொல் தமிழில் 'பவழம்' எனத் திரிந்து வரும். இன்னோரன்னவற்றை ஆயாது தனித் தமிழ்ச்சொற்களை வடசொல் எனக் கூறலுற்று இடர்ப்படுவது எற்றுக் காங்கொல்?

எனவே, 'சோழன்' என்னும் சொல் தமிழில் 'சோளன்' என எழுதுவது வழு வென்க. அற்றேல், சோளன் என்பது வடமொழியில் வழுவாகாதவா றென்னையெனின், ஒவ்வோர் பாடைக்கும் இலக்கணம் சிற்சில வேறுபாடு உடையனவாய் நடத்தல் இயல்பாகலின், தமிழ்ச்சொல் வடமொழியில் புகுந்து வழங்கு போழ்து வடமொழிக்கேற்ற இயல்புகளைப் பெறுதல் அமை யற்பாலதாகலின் வழுவன்றாம். நிற்க.

'ஆழ்வார்' என்னும் சொல்லும் வடமொழியைத் தற்போது பெரிதும் பின் பற்றி நிற்கும் மலையாள மொழியில் ஆள்வார் என எழுதப்பட்டு வருதலு முண்டு. ஆயினும் ஆளுவோர் என்றோ ஆளப்படுவோர் என்றோ பொருள் படாது ஆழ்வார் என்னும் சொல்லிற்குரிய பொருளையே பெறும். ஒரு பொருளை எக் கோலப்படுத்தினும் அப்பொருள் மாறுபடாத் தன்மை போல இன்னோரன்ன திரிபுகளாற் சொற்கள் பொருள் வேறுபடா என் றுணர்க. சொல்லின் வடிவு நோக்கிப் பொருளைத் திரித்துரைப்பின், பிறி தொரு சொல்லாகவே கருதப்படுவதாம். ஒரு சொல் பிறிதொரு நெறியிற் றிரிந்து நிகழுமிடத்துப் பொருளையும் திரித்துரைத்தல் வழக்காறு மன்றாம் என்க.

மலையாள மொழியில் 'ழ' கரம் இருப்பவும், ஆழ்வார் ஆள்வார் எனவும், தமிழ் தமிள் எனவும் புகழ் இதழ் என்பன புகள் இதள் எனவும் எழுதப் பட்டு வருகின்றன. இவையன்றி இருந்தவாறே எழுதுவதும் உண்டு. மலை மொழியார் தமிழ் இலக்கணமும் வடமொழி இலக்கணமும் தழுவுவராகலின் இவ்வாறு எழுதப்படுவது அவர்க்கு வழுவன்றாயிற்றேனும், உரிய எழுத் திருப்பவும் இந்நயங்கோடல் ஒருவாற்றான் தம்மொழியின் சிறப்பைக் கெடுப் பதேயாமன்றிப் பிறிதென்னை?

'ஆழ்வார்' என்பது ஈசுவர பத்தியில் முழுகுபவர் என்றும் மனவொரு மையில் அமிழ்பவர் என்றும் இறைவனது நல்லியல்புகளில் (கல்யாண குணங் களில்) முழுகுபவர் என்றும் பிறவாறாகவும் பொருள்படுதற் கியைபுடைத்து. ஆழ்—பகுதி; வ-இடைநிலை; ஆர்-பலர் பால்விகுதி. ஆழ்தல் முழுகுதல் அமிழ்தல் என்னும் பொருட்டாகலின் அப்பொருள்பற்றி இடத்திற் கேற்றவாறு கொள்வதன்றி, முதனிலையை மாற்றிப் பொருள்கோடல் இயையாது என்க. ஆழ்வார் என்னுஞ் சொல் வைணவ சமயத்துப் பக்தர்களைச் சுட்டி நிற்கும் வழக்காறுடைத்து. 'கம்பநாட்டாழ்வார்' 'கருடாழ்வான்' முதலிய சொற் களை நோக்குக.

ஆயின், 'ஆள்வார்' என்பதையே ஆளப்படுவோர் என்னும் பொருளில் வழங்குவது இழுக்காமோ வெனின், இழுக்கன்றேனும் அங்ஙனமொரு வழக் கின்றாம் என்க. புதியன புகுத்தலைவிடப் புதியன புகுதலே சிறப்பிற்றென் பது கருதியன்றோ 'புதியன புகுத்தலும்' என்னாது 'புதியன புகுதலும்' என்று நன்னூலாரும் சூத்திரம் செய்தனர். புதியன புகுத்தலும் ஓரோ வழிக்

கூடுமெனினும், பிறசொற்கள் கிடையா வழி அது பொருந்துவதன்றி மூற்றோன்றிய சொல் தவறு என்று திருத்துவான் புகல்போலச் சொற்களைச் செருகுதல் வேண்டா செயலாம். ஆழ்வார்என்னும் அழகிய சொற்கிடைப்ப ஆள்வார் என எழுதின் அதனையும் திருத்திவரும் வழக்கு எழுமின்றும். அங்ஙனம் செய்யப்புகின் தற்போதுள்ள சொற்கள் அனைத்தையும் நீக்கிப் புதுச்சொற்களைக் கொணரவும் முயலலாகும். அது கருத்தன் றென்பதும் அவ்வாறு செய்வழி மொழி நிலைபேறின்றி வரம்பிறக்கு மென்பதும் கருதி யன்றோ 'மரபு நிலைதிரியிற் பிறிது பிறிதாகும்' என்று தொல்காப்பியரும் கூறுவாராயினர்? ஆதலான், அது கடாவன் றென்க.

## மகாத்மா தவத்தின் முடிவு.

மகாத்மா காந்தியடிகள், தீண்டாமை விலக்குக்காகவும், தமது ஆத்ம பரிபக்குவத்துக்காகவும் 21 நாள் உண்ணாவிரத தவத்தை இம்மாதம் 8ந் தேதி பகல் 12-மணிக்கு ஆரம்பித்தார். அது 29ந் தேதி திங்கட்கிழமை பகல் 12 மணிக்கு முடிவுற்றது. மகாத்மாஜி தமது மனைவி ஸ்ரீமதி. கஸ்தூரிபாய் காந்தியால் தயாரிக்கப்பட்ட ஆரஞ்சுபழ ரஸம் இரண்டு அவுன்ஸை அருந்தினார். அப்போது ஒரு பண்டிதர் ரகுபதி ராகவ ராஜாராம் என்னும் பாடலைப் பாடினார். மகாதேவ தேசாய் கீதையினின்றும் சில சுலோகங்களைப் படித்தார். டாக்டர் அன்சாரி குர்ஆனினின்றும் சில வரிகளைப் பாராயணம் செய்தார். அதுபோலவே பைபிள், ஜண்டவஸ்தா முதலிய நூல்களினின்றும் சில வரிகள் படிக்கப்பட்டன. அப்போது மகாத்மாஜி ஒரு செய்தியைத் தெரிவித்தார். அதாவது எல்லாம்வல்ல இறைவன் பெயரால் இந்த உபவாஸத்தை முடிக்கிறேன். அவரது பெயராலேயே அது ஆரம்பிக்கப்பட்டது. அவரது பெயரால் அது முடிகிறது இன்று அவரிடத்திலுள்ள எனது நம்பிக்கை சிறிதும் குறையவில்லை. இந்தச் சமயத்தில் நான் எதையும் பேச விரும்பவில்லை. இச் சமயம் ஆண்டவனை வழுத்துவதிலும் பாராட்டுவதிலும் கழிக்க வேண்டியது அவசியமாகும். கவி ரவீந்திரநாதர் அனுப்பிய செய்தியாவது:-"சகிக்க முடியாத மனோவேதனையிலிருந்து விடுபட்டோம். நாங்கள் பிரார்த்தனா பூர்வமான மனதுடன் இந்த வெறும் திருநாளை வரவேற்கிறோம். பலம் பொருந்தியவர்களின் அநீதியாயும், மத விரோதமாயுமுள்ள மூட நம்பிக்கை, வேஷத்தனமான பக்தி, ஒழுக்க ஹீனம் முதலியவைகளை எதிர்த்து மீண்டும் தங்கள் போராட்டத்தை ஆரம்பிக்க மரணத்தின் வாயிலிருந்து நீங்கள் வெற்றி மாலையுடன் வெளி வந்திருக்கிறீர்கள்."

ஆதிஹிந்து தலைவர் ராவ்பகதூர் எம். சி. ராஜா மகாத்மாவுக்குப் பின் வருமாறு தந்திகொடுத்தார்:—தாங்கள் உபவாசமிருந்து உயிர் பிழைக்க கருணை பாலித்ததுபற்றி கடவுளுக்கு வந்தனம் உரியதாக. உண்மையான தொண்டரின் மகாதியாகத்திற்கு எல்லாம்வல்ல இறைவன் ஆசீர்வாதம் செய்திருக்கிறார் என்பதை உங்கள் வெற்றி குறிப்பிடுகிறது. இச்சம்பவம் ஆபிரகாமின் மகனை பலிபீடத்திலிருந்து கடவுள் காப்பாற்றியது போலிருக்கிறது. எனது வகுப்பினருக்கு சேவை செய்யத் தாங்கள் நீடூழி வாழவேண்டுமென்பதே எனது பிரார்த்தனை.

# அறிவுடைமை.

(தென்னாப்பிரிகா-டர்பன், சரஸ்வதி சபைத் தலைவர்
திரு. ச. முனிசாமி பிள்ளை அவர்கள்.)

"அரிது அரிது மானிடராதல் அரிது" என்பர் பெரியோர். அன்னோர் மானிடரை இங்ஙனம் புகழ்ந்து கூறுவதற்கும், இவர் அங்ஙனம் கூறப்படுவதற்கும் தக்க காரணம் இருக்கவே செய்யும். அஃது யாதாக இருக்கலாம்? தான் இருப்பதனாலேயே தன்னைப் பெற்றிருப்பவனை அனைத்தையும் பெற்றவனாகச் செய்யும் அறிவுடைமையே அஃதாம்.

ஒருவன் ஒன்றனை மாத்திரம் பெற்று, அதைக்கொண்டே அனைத்தையும் பெற்றவனாகவேண்டுமாயின், அவனிடம் அறிவுடைமை இருத்தல் வேண்டும். அறிவுடைமை அறிவை உடைத்தா யிருக்கும் தன்மை. இத்தொடருக்குக் "கல்வி கேள்விகளால் ஆகிய அறிவோடு உண்மை அறிவினையும் பெற்றவனாயிருத்தல்" என்று பொருள் கூறுவர் ஆசிரியர் பரிமேலழகர்.

அறிவு தன்னை உடையவனை உடனிருந்து காக்கும் கருவியாவது மனத்தை எண்ணியவாறே செல்லவிடாமல் அடக்கி ஆள்வது. பிறரிடமிருந்து மெய்ப்பொருளைக் காணத் துணைபுரிவது; பிறர் நன்கு மதிக்கத் தக்க சொற்களை சொல்லச் செய்வது; நுண் பொருள்களை ஆராயத் துணையாவது; உலகத்தோடு ஒத்து நடக்கச் செய்வது. விருப்பு வெறுப்பற்று இருக்கச் செய்வது; நிறைவேற்றக்கூடியதையே தொடங்கத் தூண்டுவது; அஞ்ச வேண்டியவற்றிற்கு அஞ்சவும், அஞ்சக்கூடாதவற்றிற்கு அஞ்சாமலும் இருக்க அமைப்பது, வரக்கூடியதாக இருந்த தீங்கினை முற்கூட்டி அறிந்து வாராவண்ணம் தடுத்துக்கொள்ளும் வன்மையினைப் பெற்றது. "அறிவுடையார் எல்லாம் உடையர்" "நுண் உணர்வு இன்மை வறுமை அஃதுடைமை பண்ணப் பணைத்த பெரும் செல்வம்" "அறிவின் பெருமை பெரிதும் விரிவானது."

உலகத்துத் தோன்றிய மக்கள் ஒரு தலையாக விரும்புவது பேரின்பப் பெருவாழ்வு எய்துவதையே. அந்தப் பேரின்பப் பெருவாழ்வினைப் பெற விரும்பினால் அன்னோர் அறிவினைப் பெற்றவரா யிருத்தல் வேண்டும். அறிவுடையராய் அறிவைப் போற்றி அறிவு மயமாய் விளங்குபவரே இன்பப் பேற்றினை எய்துதற்கு உரியவராவர்.

அறிவு பிறப்பால் வருவதும் அன்று; குலத்தால் வருவதும் அன்று; மொழியால் வருவதும் அன்று; பொருளால் வருவதும் அன்று; அதிகாரப் பதவியால் வருவதும் அன்று; ஆனால், அந்த அறிவு அன்பால் பெறலாவது, ஆசிரியர் அருளால் பெறலாவது; ஆண்டவன் திருவருளால் பெறலாவது.

அறிவை உண்டுபண்ணி வளர்த்துக்கொள்ளுபவன் ஆண்டவனை வணங்குபவன் ஆவன்; அறிவைப் புகழ்பவன் ஆண்டவனை வாழ்த்துபவன் ஆவன்;

அறிவைப் புகட்டுகிறவன் தானத்தைக் கொடுக்கிறவன் ஆகிறான். அறிவை உடையவன் "எந்த வழி சரியானது; எந்தவழி தவறானது" என்பதைப் பகுத்தறிந்து உணர்ந்து ஞானத்தைப் பெற்றவன் ஆகிறான்.

மனிதர்களின் போக்கு வரவு அற்ற பாலைவனத்திலும் ஒருவனுக்கு அவனிடத்துள்ள ஞானமாகிய அறிவு உற்ற துணையாக நின்று உதவி புரியும்: அறிவு ஒருவனுக்கு உத்தம நண்பனுமாகும்; பகைவர்களை வெல்லத் தக்க சிறந்த ஆயுதமும் ஆகும்; மோட்ச வீட்டை அடைவிக்கும் உண்மையான—நேரான வழியைக் காட்டுவதும் ஆகும்.

அறிவைப் பெற்றவனே இம்மை மறுமைப் பயன்களை எய்துதற்கு உரிய இன்பங்களை ஒரு சேர எய்தப் பெறுபவன் ஆவன். அறிவே இன்பம்; இன்பமே அறிவு; அறிவு 'ஒன்றாகக் காண்பதே காட்சி' என்ற உணர்ச்சியை உண்டாக்குவது. அறிவு, 'எல்லாம் ஒன்றே' என்ற உண்மையை உரம்பெறச் செய்வது. அறிவு கைவரப் பெறின், துன்பம் நீங்கும்; இன்பம் பெருகும்; எல்லாம் நன்றாம்,

ஆதலின், மக்களாய்ப் பிறந்தவர் சிலவற்றைப் பெற்றுக் குறைவு உள்ளவர்களாக வாழாமல், எல்லாவற்றையும் பெற்று நிறைவு உள்ளவர்களாக வேண்டி அறிவைப் பெறுமாறு முயலுவாராக.

## கற்பூரம்.



சாதாரணமாகக் கற்பூரம், கற்பூர மரத்திலிருந்து செய்யப்படுகின்றது. கற்பூர மரங்கள் சீனா, ஜப்பான் முதலிய தேசங்களின் காடுகளில் விசேஷமாக வளர்கின்றன. இம்மரங்கள் சுமார் 40, 50 அடி வரையிலும் வளரக்கூடியது. கற்பூரத்தைத் தரும் ரஸம் அம்மரத்தின் எல்லா பாகங்களிலும் உண்டு. முக்கியமாக வேர்ப் பாகத்தில் தான் அதிகம். இம்மரத்தை அடியோடு வெட்டிப் பல சிறு துண்டுகளாக்கிப் பெரிய பாத்திரங்களில் ஜலத்தில் ஊறவைப்பார்கள். நன்றாய் ஊறியபிறகு அவற்றை அடுப்பிலேற்றிக் காய்ச்சுவார்கள். அப்பாத்திரங்களைத் துவாரங்கள் நிறைந்துள்ள தட்டுகளைக் கொண்டு நன்றாக மூடிவிடுவார்கள். துவாரங்களின் குறுக்காக அநேகவிதமான இலைகளைப் பரப்பி வைப்பார்கள். ஜலம் காயக்காயக் கற்பூர ரஸம் ஜலத்துடன் நன்கு சம்பந்தப்பட்டு ஆவி ரூபமாய் மேலே கிளம்பி இலைகளின் குளிர்ச்சியினால் கட்டியாகி அவற்றில் ஒட்டிக் கொள்ளும். இவ்விதமாக ஒட்டிக்கொண்டவைகளை இலைகளிலிருந்து வழித்து எடுத்து மறுபடியும் உருக்கி ஆவியாக்கி, மறுபடியும் குளிர வைத்துச் சுத்தமான கற்பூரமாகச் செய்கின்றார்கள். கற்பூரத்தைக் கெட்டியாகவும், அச்சுகளின் மூலம் சிறு சிறு பில்லைகளாகவும் செய்து விற்பனை செய்கின்றார்கள்.




# இது நெறியற்ற நினைவா?

கோவை. திரு. சி. து. நாராயணசாமி முதலியார்.

1

அச்சிற்பி ஒரு சிறு குடிசையில் சயனித்துக்கொண்டிருந்தான். அவன் விழித்தெழுந்தபோது சூரியன் உதயமாய் அக்குடிசை கதிரவன் கிரணங்களின் காந்தியினால் பொன்னிறமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருந்தது. அச்சமயம் அவன் தனது கோரிக்கையுடனும் புதிய உணர்ச்சியுடனும் வெளியில் வந்து அரை மையிலுள்ள கொடி வீட்டுள் நுழைந்து சித்திரந் தீட்டத் தொடங்கினான். இம்முயற்சியில் அவன் பசி, தாகம் முதலியவற்றை அறியாது பதிந்த மனதுடன் சவன திருஷ்டியில் சிரங்குனிந்த வண்ணம் ஓவியம் வரைந்துகொண்டிருந்தான். பின் அவன் தலை நிமிர்ந்து பார்த்தபொழுது நான்கு திசையிலும் அந்தகாரம் நிறைந்திருந்தது. அவன் வரைந்துகொண்டிருந்த சித்திரமும் பூர்த்தி பெற்றது. அதனை அவன் கையிலெடுத்துக்கொண்டு நிரம்பக் களைத்த தேகத்துடன் குடிசையுள் பிரவேசித்தான். சிறிது முன் பின்னாக அவனது வாழ்நாள் அனைத்தும் இவ்விதமாகவே கடந்ததென்று கூறுவது அதிசயமாகாது.

2

அலட்சியமாகவும் அகஸ்மாத்தாகவும் அவன் யௌவன உலகத்தில் பிரவேசித்தான். மனம் எங்கேயோ இருந்தது. அதனால் அவனுக்குச் சித்திரம் தீட்டுவதில் சிரத்தை குறைந்தது. விரகத்தினாலோ, மற்றெக் காரணத்தினாலோ அவன் மனம் வேதனையடைந்து துக்கத்தைத் துய்க்கலானான்.



ஒரு நாள் இரவு அவன் தன் கண்ணுக்கு நித்திரை வாராததனால் வெண்ணிலா நீல நிற ஆகாயத்தில் பூர்ண வொளியில் பிரகாசித்துக்கொண்டிருக்கும்போது சாந்த நிலயமான குடிசையினின்றும் வெளியே வந்தான். அப்போது மந்த மாருதம் வெகு அந்தமாக வீசி தேகத்திற்கு ஆனந்தத்தைத் தந்துகொண்டிருந்தது. அதனை அனுபவித்த அவன், மிக்க மகிழ்ந்து அவ்வழகிய தோற்றத்தை எழில்பெறச் சித்தரிக்க வேண்டுமென்ற நினைவினால் அவன் அங்ஙனம் வந்தான் போலுமென்று

கருதவேண்டியதாயிருந்தது. இல்லையாயின், அவன் வெளியில் வந்ததும் சற்றே உட்கார்ந்து வான மண்டலத்தின் அழகைக் கண்டு அங்குமிங்கும் சுற்றிச் சூர்ந்து கவனித்து ஊன்றிய மனதுடன் தட்டென மீண்டும் குடிசையுள் நுழையக் காரணமில்லை. இதனால் அவன் அடைந்த லாபமென்ன? இருதயத்திற்குப் பட்டதென்ன? ஒரு புறம் தேகத்தில் புளகாங்கிதமும் மற்றொருபுறம் மனத்திற்கு மட்டற்ற வேதனையும் மாறி மாறியுண்டாயின. இவ்வாறு ஏற்பட்டதன் காரணம் கண்டறிவது கஷ்டமானது. மறுநிமிஷத்திலேயே அஞ்சுகத்தின்மீது அவனுக்கு அநுராகம் உண்டாயிற்று. அதுமுதல் அவன் மோக சாகரத்தில் மூழ்கலானான்.

இது எத்தகைய நியாயம்? அஞ்சுகம் ஓவிய வல்லானின் கண் வலையில் வீழ்ந்தாள். அதனால் அவள் தனது சுக சௌக்கியங்களனைத்தும் கெடுத்துக் கொண்டு கஷ்ட ஜீவனமாகக் காலங் கழிக்கும்படி நேர்ந்தாள். இதனைத் தான் சொல்லாமற் சொல்லித் தனது வழியே சென்றாள். அவள் மிகவும் யௌவன வயதினளாக விருந்ததனால் தனது மனோபாவத்தை அடக்கிக் கொண்டு செல்லவேண்டியதாயிற்று.

3

“எனக்கு ஓவியம் வரைவதற்குக் கற்பிக்கின்றீரா?” என்று குயிலினைப் பழிக்கும் குரலில் அஞ்சுகம் ஒருநாள் சிற்பியை யடுத்து வினவினாள்?

சித்திரவல்லான் அஞ்சுகத்தை நெஞ்சில் நினைத்துக்கொண்டு ததேக தியானத்தில் அசைவற்று, சுகானந்தத்தில் திளைத்திருந்தான். செவுகளுக்கு நல் விருந்தளிக்கும் அவ்வபூர்வ சுரம் செவியிற் பட்டதும் சிற்பி திடுக்கிட்டு விழித்து வினவியதென்ன? இவ்வினிய கண்டத் தொனி யாருடையது? என்று வியப்படைந்தான். அப்பொழுது அவனது இருதயத் தந்திகளில் அவ்வினிய சுரம் நாதம் செய்துகொண்டிருந்தது.

எனக்குச் சித்திரம் வரைவதற்குக் கற்றுக்கொடுக்கின்றீரா? என்று அஞ்சுகம் அவனை மீண்டும் கேட்டாள்.

அப்பொழுதவன் அஞ்சுகம் நின்ற திசை நோக்கித் திரும்பிப் பார்த்தான். அவள் அங்கு நின்றுகொண்டிருந்தாள். அவளது குளிர்ந்த பார்வையில் சித்திரீகன் மிகவும் பந்தப்பட்டுப் போனான். அவளது இனிய முகமண்டலம் இளரோஜா நிறத்தின் எழில் வாய்ந்து விரும்பக்கூடியவாறு விளங்கிக் கொண்டிருந்தது. ஏதோ! அபூர்வமானதொரு எண்ணம் அவனது நெஞ்சிற் புகுந்து பொங்கி வழிந்துகொண்டிருந்தது. அஞ்சுகம், திரும்பவும், “எப்பொழுது கற்பிக்கத் தொடங்குகின்றீர்?” என்று கேட்டாள். அப்பொழுது சிற்பி மிகவும் கஷ்டத்துடன் நாணத்தை அடக்கிக்கொண்டு அடியில் வருமாறு கூறினான்:—“ஓவியம் இன்னும் நன்றாய் வரைவதற்கு நானே அறி



யாதவனாகவிருக்கிறேன். அங்ஙனமிருக்க உனக்குக் கற்பிப்ப தெங்ஙனம்? எனினும், உனது தந்தை இவ்விஷயத்திற்கு உடன்படுவாரா? என்றான்.

அஞ்சுகம்:—"அவ்வெண்ணம் உமக்கேன்? உமக்குத் தெரிந்ததை எனக்குக் கற்பித்தால் போதுமானது. இதில் உமக்குவரும் நஷ்ட மென்ன? எனது தந்தையின் அநுமதி பெற்றே நான் இங்கு வந்திருக்கிறேன்" என்றாள்.

சிற்பி:—சந்திர சூரியர்கள் நன்றாகத் தாண்டவமாடும் இவ் வோட்டைக் குடிசையுள் உன்போன்ற நவ யௌவன செல்வ மாதர் வீற்றிருத்தல் கூடுமா?

அஞ்சு:—கூடும். நீர்மட்டும் இங்கிருந்து ஓவியம் தீட்டும்போது நானுமிருந்து ஓவியம் வரையக் கற்றுக்கொள்ள மாட்டேனா? பேச்சில் பிரயோஜனமென்ன? எப்பொழுது கற்பிக்கின்றீர்? விரைந்து கூறும்.

சிற்:—உனக்கு விருப்பம் உண்டானபோது.

அஞ்:—நாளைமுதல் கற்பியும். கற்றுக்கொள்ளுகிறேன்.

சிற்:—அப்படியே.

(அப்பொழுது அஞ்சுகத்தின் ஆனனம் அலர்ந்த தாமரைபோல் விகசித்தது.)

அஞ்:—"நான் நாளைக்கு வருகிறேன்" என்று கூறி அங்கு நின்றும் பெயர்ந்து அன்னமென நடந்து அப்பாற் சென்றாள்.

மறுநாள் உதயத்திலிருந்து சிற்பி அஞ்சுகத்திற்குக் ஓவியம் வரைவதைக் கற்பிக்கத் தொடங்கினான். சில நாட்கள் கழிந்தன.

4

ஒருநாள் ஓவிய வல்லானும், அஞ்சுகமும் சித்திரம் வரைவதற்காக வீற்றிருந்தார்கள். அப்பொழுது அஞ்சுகம் புன்னகை தவழச் சிற்பியை நோக்கி, "இதென்ன நீர் எனது முகத்தையே கண் சிமிட்டாமல் பார்த்துக்கொண்டிருக்கின்றீர்? காரணமென்ன? இங்ஙனமிருந்தால் ஓவியம் பூர்த்தி பெறுவ தெங்ஙனம்? எழுதுகோல்தான் எங்ஙனம் இயங்கும்?" என்றாள். சிற்பி நாணமடைந்தவனாய்த் தலைகுனிந்துகொண்டு படத்திற்கு வர்ணம் கொடுக்கத் தொடங்கினான்.

அஞ்சுகம்:—"இதென்ன? நீர் சிகப்பு வர்ணம் தீட்டுவதற்குப் பதிலாகப் பச்சை வர்ணம் வைக்கின்றீர்? இதனால் சித்திரம் சீர் குலையும். உம்மால் இனி ஓவியம் வரையவும் இயலாது" என்றாள்.

சிற்பி அவள் வாய் மொழியைக் கேட்டு உளந் தடுமாறி பெருமூச் செறிந்து, "அஞ்சுகம்! நீ கூறியது முற்றிலும் உண்மையே. என்னால் இனி ஓவியம் தீட்டுவதும் இயலாதுதான்" என்றான்.

அஞ்சுகம் தான் கையிற்கொண்டிருந்த சித்திரந் தீட்டுங் கோலைப் பிடித்தபடியே சிற்பியைப் பார்த்து, "நீர் இங்ஙனம் கூறுவதற்குக் காரணம் யாது? உண்மையைக் கூறும். உமது மனம் சித்திரந் தீட்டுவதில் நிலைபெறவில்லையா?"

சிற்பி:—அதிசயித்து என்னமோ ஒன்றும் எனக்குத் தோன்றவில்லை. மிகுதியான மனோ வேதனைக்கு உள்ளாயிருக்கிறேன். காரணம் கூறுவது கஷ்டமாயிருக்கிறது.

அஞ்:—நீர் இதுவரையிலும் வியக்கத்தக்க ஓவியங்கள் தீட்டி வந்திருக்கின்றீர், இப்பொழுதுமட்டும் உம்மால் அத்தகைய ஓவியங்கள் வரையக் கூடாமல் போனதேன்?

சிற்:—நான் வரையும் ஓவியம் இப்பொழுது நன்றாயில்லை யென்பதை நீ எவ்வாறு அறிந்தனை?

அஞ்:—நீர் முன்னம், கொடி வீட்டில் அமைதியாய் இருந்து பசி தாகம் முதலியவற்றைப் பொருட்படுத்தாது ஆழ்ந்த கவனத்துடன் அருமையான சித்திரங்களைத் தீட்டிக்கொண்டிருந்ததை நான் பார்த்திருக்கிறேன். அவை மனத்தைக் கவரும் மாண்புடையவையாய் யாவரும் பாராட்டிப் போற்றக்கூடியவையாய் இருந்தன. இப்பொழுது வரைவது அவ்வளவு அழகுடையதாயில்லை. அதனாலேயேதான் நான் அவ்வாறு கூறினேன். நீர் மீண்டும் அத்தகைய உயர்ந்த ஓவியங்களைத் தீட்டினால்தான் உமது கீர்த்தி எங்கும் பரவி நிலைபெற்றிருக்கும்.

சிற்:—நீ கூறுவது உண்மைதான். ஆனால், எனக்குச் சிறிது காலமாகத் துக்க சம்பந்தமான ஓர் ஓவியத்தை வரைய வேண்டுமென்பதிலேயே மனது சென்று கொண்டிருக்கிறது. ஆயின், இதுவரையிலும் அத்தகைய ஓவியம் வரைவதற்கேற்ற சந்தர்ப்பம் ஏற்படவில்லை.

அஞ்:—நீர் வரைய விரும்பும் துக்க சம்பந்தமான ஓவியம் எத்தகைய உட்கருத்தைக் கொண்டது?

சிற்:—"கூறுகிறேன் கேட்பாயாக. திருவும் செல்வமும் வாய்ந்த இளந் தம்பதிகள், சுகமாகக் காலத்தை கழித்துக்கொண்டிருக்கும்போது ஒரு புதிய மனிதன் தோன்றி அவர்கள் வாழ்க்கையை மேலும் இன்பகரமாகச் செய்ய, அவர்கள் ஆனந்தத்தை ஆராக் காதலுடன் அநுபவித்துக்கொண்டிருந்தார்கள். திடீரென குடும்ப நாயகன் அந்தகனால் கவரப்பட்டான். தலைவியும், தனயனும் துக்கத்தை ஆற்றாராய்த் தவிப்பது போன்றது."

அஞ்சுகம் அதுகேட்டு மிகவும் வருந்தினள். "அந்தோ! அக் கொடிய உருவத்தை வரையவே வரையாதீர்கள். அது மனதிற்கு மட்டற்ற வேதனையைத் தரும். ஆனதால் வேண்டவே வேண்டாம்; உண்மைக்காதல் நிரம்பிய அன்புசெழுமிய ஆர்வத்தைப் பிரதி பிம்பித்துக்காட்டும் இனிய ஓவியத்தை வரையுங்கள்" என்றாள்.

சிற்பி:—"ஓர் இன்ப இரவில் உடுபதி தாரா கணங்களுடன் வானமண்டலத்தைத் தன் வெள்ளி கிரணங்களால் அலங்கரித்துக்கொண்டிருக்கையில், என்போன்ற எளிய ஓவிய வல்லானொருவன், உன்போன்ற செல்வ மிகுந்த லாவண்ய நிதியைக் காதலிக்கின்றான்......அவ்விள மாதுக்கு அடிமைப் படுகின்றான்" என்று கூறி அஞ்சுகத்தைக் கூர்ந்து நோக்கினன். அஞ்சுகம் முகம் சிவந்து காணப்பட்டாள். அதுகண்ட அவன் மிகவும் எளிய முகங் காட்டி, தழு தழுத்த மொழியில், "அன்பே! அஞ்சுகம்!" என விளித்து அவளது மெல்லிய கரங்களை மெதுவாகப் பற்றிக்கொண்டு, "இப்பொழுதேனும் எனது உளக்கருத்தை அறிந்தனையா?" என்று வினவினன்? அதுகேட்ட அவள், "அஞ்சுகம் யார்? ஓவிய வல்லானவன்?" என்றாள். என்றதும் அவள் நாணத்தால் சிரங் குனிந்து கொண்டாள். அப்பொழுது அவள் தேகம் அனைத்

தும் ஒருவித நடுக்க மெடுத்தது. அதுகண்ட ஓவியன் ஆதரவுடன் "இது நெறிவற்ற நினைவா?" என்று அவளை நோக்கி வினவினன். அஞ்சுகம் ஓவியன் கைகளினின்றும் தன் கைகளை விடுவித்துக்கொண்டு அங்குநின்றும் நீங்கி மின்னென மறைந்து சென்றாள்.

அவள் சென்ற வழியிலிருந்து திரும்பிய தென்றற் காற்று கொணர்ந்த செய்திதானென்ன? அது ஒன்றிரண்டு கொடுஞ் சொற்களாயிருக்கக் கூடும்.

சிற்பி மௌனமாக விருந்தான். அவனது மனோபாவம் அறியக் கூடாதாயிருந்தது. வெளியுலகத்தை முற்றும் மறந்தானென்று மட்டும் கூறலாம். இந் நிலையில் ஒரு சேடி அவனருகணைந்து அவனை அழைத்தாள். அதனுல் அவனுக்குச் சிறிது நினைவு தோன்றிற்று. அவள் கொணர்ந்த கடிதத்தை ஓவியனிடம் தந்தாள். அது அஞ்சுகத்தால் அனுப்பப்பட்டது. அதில் அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது. "நாளைமுதல் நான் குடிசைக்கு வாரேன்" என்பதே அது. இவ்வாசகத்தை வாசித்ததும், ஓவியன் முகம் சோர்ந்தது. அவனும் தரையிற் சாய்ந்து மூர்ச்சையானன்.

5

ஐந்தாறு ஆண்டுகள் கழிந்தன. சிற்பியின் மனம் என்னும் சாகரத்தில், சோகம் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. எனினும் துக்க வேதனைக்காளாகாமல் மிகவும் உறுதியுடனிருந்தான். அஞ்சுகத்தின் பேரன்புகூட அவன் மனதை அலைக்கும் ஆற்றலற்றதாயிற்று. சிற்பி தெளிவற்ற ஒரு அழைப்பிற்குச் செல்லவும் இணங்காமலிருந்தான். இவன் நீண்ட நாளாகத் தனது அரும் பெரும் முயற்சியால் தனது கைத்திறனெல்லாங் காட்டித் தனது மெய்க்காதலி அஞ்சுகத்தின் அழகிய ஓவியத்தை இன்பாகாரமாய் எழில் விளங்குமாறு இனிது சித்திரித்து முடித்தான். அவளது அற்புத வடிவத்தைப் பார்த்துப் பரவசமானன். இறுதியாக அவன் இந்திரியங்களுக்கெட்டாத லோகத்தில் பிரவேசித்து மறைந்தான்.

அன்றிரவு காடாந்தகாரமான காரிருள். அவ்விருட்டில் அஞ்சுகம் ஒரு சொப்பனங் கண்டு அஞ்சி திடுக்கிட்டெழுந்து தனது மஞ்சத்தில் உட்கார்ந்தாள். ஓவியனது விஷயம் அவள் மனதிலுதித்தது. 'இது நெறியற்ற நினைவா?" என்ற தீன மொழி அவள் செவியிற் தொனித்தது. அது முதல் நித்திரை செய்தாளில்லை. மனோவேதனை பன்மடங்கதிகரித்தது. இதற்குள் வெள்ளி உதயமாய் சூரியனும் தோன்றினன். அவளது கவலை மேலும் அதிகரிக்கலாயிற்று. கண்ணீர் பெருக்கினள். வெய்துயிர்த்தாள். விம்மி விம்மி அழலானள். வெம்மைக் காற்றுறு பசுங்கொடி துவள்வதுபோல் துவண்டாள். அன்று பகல் முழுவதும் அவள் பட்ட படுந்துயரம் பகர்வதற்கரியதாயிருந்தது. கதிரவன் இன்னமும் அஸ்தகிரியினின்று மறைந்தானில்லை. சந்தியாதேவி தனது நீல நிற ஆடையினுல் பிர்ம்மாண்டத்தைக் கவிந்து கொண்டாள். சூரியன் சமஸ்த சராசர ஜந்துக்களிடத்து விடைபெற்றுக்கொண்டு ஆகாயத்தைச் செந்நிறமாகச் செய்துவிட்டு மேற்குத் திசையிற் சென்று மறைந்தான்.

அப்போது ஓவியனைக் காண்பதற்காக அஞ்சுகம் குடிசையை அடைந்தாள். கொடி மலர்க் கதவு திறந்தேயிருந்தது. அது கண்ட அஞ்சுகம் ஆச்சரியமடைந்தாள். "அன்பா! நீ எங்குளாய்? எவ்விடத்து மறைந்து கொண்

ளாய்" என்று கூறிக்கொண்டே அங்கு மிங்கும் அலைந்தாள். நாற் புறமும் தேடினாள். அப்பொழுது அக்குடிசையின் ஓரிடத்துள்ள படம் தென்பட்டது. தனது உருவமாயிருந்தது. அற்புதமாகத் தீட்டப்பட்டிருந்த அப்படத்தைப் பார்த்து இதனைத்தான் அன்பன் இத்தனை நாளாகச் சித்திரித்திருந்தான் போலும் என்று கூறி அவ்வுருவத்தையே கூர்ந்து கவனித்துக் கொண் டிருந்தாள்.



அஞ்சுகத்தின் அழகிய படத்தினை யொட்டியே ஓவியனது உருவமும் சித்திரித்து வைக்கப்பட் டிருந்தது. அவனது படத்தில், அஞ்சுகத்தின் கைகளை சித்திரவல்லான் பற்றிக் கொண்டு எளிய பார்வையில் "இது நெறியற்ற நினைவா?" என்று வினவு வது போல் சித்திரிக்கப்பட் டிருந்தது. அப்படத்தின் கீழ் ஓர் கடிதம் வரைந்து வைக்கப் பட்டிருந்தது. அக்கடித வாசக மாவது:—

அன்பு நிறைந்த அஞ்சுகம்!

நீ எப்பொழுதேனும் ஒரு சமயம் இக் குடிசைக்கு வருவாயென்ற உறுதி யின் மிகுதியால் எனது குடிசை உனது நல்வரவிற்காகத் திறந்து வைக்கப் பட்டிருக்கிறது எனது விருப்பத்தை நான் உன்னிடம் தெரிவித்துமிருக்கி றேன். அதற்கேற்பத் தீட்டப்பட்டுள்ள ஓவியமும் இது வாகும். இது நன்றாக இருக்கிறதா? உனக்கு என்மீது சிறிதேனும் கருணையிருக்குமானால், ஒரு க்ஷண காலமாவது என்னைக் காதலித்திருப்பது உண்மையாயின், நீ இவ்வழகிய படத்தை உயிரினும் உயர்வாக மதித்து ஜாக்கிரதையாகக் காப்பாற்றுவா யென்று நம்புகிறேன். அதுதான் எனக்கு மிகுதியான களிப்பைத் தருவதா யிருக்கும்; அல்லாமல் எனது இருதயமென்னும் குடிசை உனது இனிய வர விற்காகத் திறந்தே வைக்கப்பட் டிருக்கிறது. அவ்வழி என்ன காரணத்தினா லும் மூடப்படமாட்டாது. பரலோகத்திலுங் கூட உன் பொருட்டுக் காத்துக் கொண்டிருப்பேன்."

அதிர்ஷ்டஹீனன் சிற்பி

அக்கடிதத்தை வாசித்ததும் அஞ்சுகம் அசைவற்று நின்றாள். அவளது நீல விழிகளின்றும் பெருகிய கண்ணீர்த் துளிகள் தனது கன்னத்தைக் கழுவி மார்பை நனைத்துப் பூமியில் பிரவகித்தது. அப்பொழுதவள் அவனது உருவப்படத்தை தனது அழகிய நெற்றியில் ஒத்திக்கொண்டு தனது இருத யத்தை அதனிடத்துப் பிரவகிக்கச் செய்தாள். சிறிது பொழுதிற்கெல்லாம் அஞ்சுகம் மூர்ச்சை யடைந்து நித்திராதேவியின் வசமானாள். சொப்பனத்தின் ஓவியவல்லான் அழைப்பு அவளது செவிக்குக் கேட்டது. அவள், "இதோ! வருகிறேன்; பிரபு இதோ! வருகிறேன்" என்று கூறிக்கொண்டே சித்திரீக னைச் சமீபித்தாள். இப்பொழுது அஞ்சுகம் எங்கே.

# வணிக தருமம்

("கலாவதி")

ஆங்கிலப் பேரறிஞராகிய Ruskin ஆசிரியர் எழுதிய "Unto This Last" என்னும் நூலின் மொழி பெயர்ப்பு.

## 5. வளர் பொருள்

" வணிகர்க்கழகு வளர் பொருளீட்டல் "

அசேதனமாகிய பொருளுக்கு வளர்ச்சி இயையுமாறில்லை. பின், வளர் பொருள் என்பதன் கருத்து யாது? மக்களது உடல் வளர்ச்சிக்கும் அறிவு வளர்ச்சிக்கும் கருவியாகும் பொருளே வளர் பொருள் எனப்பட்டது. இப்பொருட்களைத் தேடித் தேசமக்களது உபயோகத்துக்கு அளிப்பதே வணிகர் தொழில் என்பது முன்னர்க் கூறப்பட்டது.

ஒரு பொருளின் பயன் அதைக் குறித்த நமது நினைவையும் அப்பொருளின் அளவையும் பொறுத்ததல்ல; அதைப்பற்றி என்ன நினைத்தாலும், அதில் எவ்வளவு தேடிக் கொண்டாலும், இவற்றால் அப்பொருளின் பயன் மிகுவதுமில்லை; குறைவதுமில்லை. அது பிரயோசனப்படும்; அல்லது பிரயோசனப்படாது. எவ்வளவு நன்மதிப்பும் எவ்வளவு இகழ்ச்சியும் அப்பொருளுக்கு இறைவன் அளித்துள்ள சக்தியை உயர்த்தவோ தாழ்த்தவோமுடியாது. தேசத்தினர்க்கு வாழ்க்கைக்கு ஆதாரமாகும் பொருட்களை விரும்பித் தேடவும், அழிவுக்கு வழிகாட்டும் பொருட்டு பொருட்களை வெறுத்து அழிக்கவும் கற்பிக்கும் நூலே உண்மைப் பொருளாதார சாஸ்திரமாம்.

அறியாமையால், தம் நல்வாழ்வுக்கு அவசியமாகாத பொன், வெள்ளி இரத்தினங்களை அரும்பொருள்கள் எனவும், அந்நல்வாழ்வுக்கு அத்தியாவசியமான காற்று, நீர், வெளிச்சம் சுத்தம் முதலியவற்றை அலட்சியமாகவும், இன்ப வாழ்வுக்கே இன்றியமையாத மனவமைதி, நம்பிக்கை, அன்பு ஆதியவற்றைப் பொன் வெள்ளி முத்து ஆதியவற்றுக்கு விற்கத் தகுந்த பொருட்களாகவும் கருதி மயங்கும் மனிதர்க்கு வெறும் வெளிப்பகட்டு இது எனவும் உண்மையிற் பொருளாவது இதுவே எனவும் காட்டித் தெருட்டுவதே பொருளாதார சாஸ்திரத்தின் நோக்கம்.

செல்வமுடைமையாவது யாது? "உபயோகமுள்ள பொருட்களை ஈட்டித் தொகுத்து வைத்திருத்தலே செல்வமுடைமையாம்" என்று சாதாரணமாகப் பதில் கிடைக்கும். இதில் "உடைமை" என்பதன் பொருள் என்ன? "உபயோக முள்ள" என்பதனாற் குறிக்கப்படுவது யாது?

முதலில் "உண்மை"யை எடுத்துக் கொள்வோம். மைலன் (Milan) நகரத்துக் கிறிஸ்தவப் பெருங் கோவிலின் இரு பாரிசங்களுஞ் சந்திக்குமிடத்

தில் சாரலோ பரோமியோ என்னும் பக்த சிரேஷ்டரது உடம்பு தைலமூட்டி வைக்கப்பட்டிருக்கிறது. அதன் கையில் ஒரு பொற்பிரம்பும் மார்பில் மரகதத்தால் இழைத்த ஒரு சிலுவையும் உண்டு. இவை உபயோகமுள்ள பொருட்களே எனக் கொள்வோம். இவற்றை அவ்வுடம்பு "வைத்திருக்கின்றது" எனலாமா? இவை அதற்கு உரியவைதாமா? அல்லவெனின், உயிரிலா உடம்புக்கு "உடைமை" பொருந்தாதெனின், உடலில் எத்துணை உயிர்ப்பு உடைமை பாராட்டப் போதியதாகும்?

கலம் ஒன்று உடைந்தபோது பிரயாணி ஒருவன் இருநூறு பொன்னை இடுப்பிற் கட்டிக் கொண்டான். பிறகு அவன் கடலில் அப்பொன்னுடன் அமிழ்ந்து கிடக்கக் காணப்பட்டான். அவன் பொன்னுடன் (அதன் பாரத்தால்) அமிழும்போது அவன் பொன்னைவைத்திருந்தானா? அல்லது பொன் அவனை வைத்திருந்ததா?

அப்பொன் தன் பாரத்தால் அவனை அமிழ்த்துவதற்குப் பதிலாக அவன் தலையில் அடித்து, பைத்தியத்தையோ அல்லது வேறு தீராத வியாதியையோ வருவித்தால் அது அவனது "உடைமை" ஆகுமா? இவ்வாறே இன்னும் உயிர்ப்பும், உணர்வும், உபயோகிக்கும் திறமையும் வரவர அதிகரிக்கும் பல தரத்து உதாரணங்கள் கூறலாம்.

பலர், பொருளைத் தம் "உடைமை" ஆக்கிப் பயன்துய்க்கப் புகுந்து, முடிவில் தாமே பொருளுக்கு அடிமை ஆகி அழிவு உறுதல் கண்கூடு. பொருளும் அதனைத் தக்கபடி உபயோகிப்பவனுக்கே பயன் தரும். பொருளை உபயோகிக்கும் தகைமை இல்லாதவழி பொருள் பயன் தருவதில்லை.

"நாம் உபயோகிக்கக்கூடிய பொருட்களைத் தொகுத்து வைத்திருப்பதே செல்வ முடைமையாம்" என நமது வரை விலக்கணத்தைத் திருத்திக் கொள்வோம். இத்திருத்தம் அதி முக்கியமானது. பொருள் உபயோகமுள்ளதாக இருந்தால் மட்டும் போதாது; அதனை நாம் உபயோகிக்கக் கூடியதாக இருக்கவும் வேண்டும்.

இனி, உபபோகமும் உபயோகிப்பவன் தகுதியைப் பொறுத்ததேயாம். ஒரு பொருளை நல்வழியில் உபயோகிக்கலாம் அல்லது துர்விநியோகம் செய்யலாம். அளவாக அறிந்து உபயோகித்தால் உடம்புக்கு நன்மை தரும்; பல பதார்த்தங்கள் அளவு சிறிது மிகினும் நோய் தருவனவாம். ஒருவன் கையில் நன்மைக்குக் கருவியாவது இன்னொருவன் கையில் தீமைக்கே கருவியாம்.

திருவுடையான் கைப்பட்ட திருவே உபயோகப் படுவதாம். உடைமைக்கு ஆண்மை இன்றியமையாதது. பொருளைச் சேர்ப்பதுடன் அதனை ஆளுந் தன்மை (ஆண்மை) யையும் தேடிக்கொள்ள வேண்டும். பொருட்களைப் பகுத்து அளிக்குமிடத்து ஒவ்வொரு பொருளையும் அவ்வப் பொருளை உப உபயோகிக்குந் தகுதி உடையவரிடம் கொடுப்பதே தேச பொருளாதார விஞ் ஞானமாம்.

ஒரு தேசத்தின் செல்வத்தை மதிக்குமிடத்து ஆண்டு உள்ள பொருளை மட்டுமல்ல, அப்பொருளை வைத்திருப்போர்களின் தகுதியையும் கணிக்க வேண்டும். செல்வர் எனக் கருதப்படுபவர் பலர் உண்மையில் அவர்களது

பணப்பெட்டிகளை ஒத்தவரே. பொருளை ஆளும் தகைமை சிறிதும் இல்லாத இவர்கள் ஒரு காலத்தும் செல்வத்தாலாம் பயன்கொள்ள மாட்டார்கள்.

பாசி படிந்த குளமும், ஆற்றிற் சுழியும் மற்றும் பயனற்றனவாய்—மக்களை அல்லது கால் நடைகளை அமிழ்த்தவே இடப்பனவாயிருந்தும், ஆறு வற்றிய காலத்து வேறு நீர் கிடையாதபோது நீர் உதவக் கூடியனவாதல் போல, இவர்களிற் சிலர் வைத்திருக்கும் பொருள் சாதாரண காலங்களில் சற்றும் பயன் படாது அல்லது தேச பொருளாதார விருத்திக்குத் தடையே புரிந்து தேசத்திற் பெரும் பஞ்சம் வந்தபோதே பயன் படும் தன்மையதாம்.

"பிறர்க்குதவி செய்யார் பெருஞ் செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும்—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயன் முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு".

என்னும் ஆப்த வாக்கியத்திற்கு இலக்காகப் பிறர் மூலமாகவே பயன் படும் செல்வம் உடையர் சிலர்.

தகவிலான் கைப்பட்ட தன்மையால் "நல்லார் கட்பட்ட வறுமையின் இன்னு" தாய், "ஆக்கம்" ஆகும் தன் இயல்பு இழந்து, "அழிவு" ஆகித் தன்னைச் சூழ அழிவும் துன்பமும் பரப்பும் பொருளும் உண்டு.

தாம் இருக்கும் வரை தமது செல்வத்தை எதற்கும் பயன்பட வொட்டாராய், வெறுமே காலஹரணங்களாக இருப்பவரும் சிலர். தேசம் அளவுக்கு மிஞ்சி வேகமாகச் செல்லுந்தகையதாயின், இவர்கள் அந்த வேகத்தைத் தணித்தலால் இவர்களாற் சிறிது பயன் உண்டு.

பொருளும் ஆண்மையும் ஒருங்கு சேர்ந்த வழியே "ஆக்கம்" ஆகும் ஆயின், "இரு வேறுலகத் தியற்கை திருவேறு, தெள்ளிய ராதலும் வேறு" என்றபடி இவை இரண்டும் ஒன்றுடன் ஒன்று இயைவது அரிதாகின்றது.

ஆண்டகைமை உடையான் பொருளை அலக்ஷியமாகக் கருதி இகழ்ந்து தள்ளும் இயல்புடையான். பொருளும் ஆண்மைக் குணத்தை அரித்துத் தின்னும் சுபாவம் உடையது. தேச பொருளாதார சாஸ்திரத்தின் கஷ்டமெல்லாம் ஒன்றை யொன்று அழிக்கும் பாங்குடைய இவை இரண்டையும் ஒருங்கிணைத்து வளர்ப்பதிலேயாம்.

## நாட்டு முன்னேற்றத்திற்குப் பத்துக் கடமைகள்

1. சுதேசச் சாமான்களை ஆதரித்தல். 2. நமது நாட்டில் உற்பத்தி செய்ய முடியாத பிற நாட்டுப் பொருள்களை மட்டும் வாங்குதல். 3. விளை பொருள் உற்பத்தியை அதிகப்படுத்தல். 4. பொருள்களை உற்பத்தி செய்ய ஒத்துழைத்தல். 5. நமது பொருள்களின் ஏற்றுமதியை அதிகப்படுத்தல். 6. தொழில்களில் இந்தியரைச் சேர்த்தல், போக்குவரவு சாதனங்கள்-இன்ஷியூரன்ஸ் முதலியவைகளில் இந்தியரையே ஆதரித்தல். 7. இந்தியக் கருவிகளை உபயோகித்தல். 8. புதிய கைத்தொழில் காணல், தொழில்களில் விஞ்ஞானசாஸ்திரப் பிரயோகம். 9. நாணயம்-நற்பெயர் தேடல்-பொருள்களின் தன்மையை உயர்த்தல். 10. இந்தியப் பணத்தையே உபயோகித்தல்.

# உள்ள நூல்

திரு. மா. பாலசுப்பிரமணியம், பி. ஏ.

## தொகுதி யளவை. (Group Tests)

ஒரு குறிப்பிட்ட கூட்டத்தின் அறிவின் அளவை அறிவதற்கு ஏற்றவை தொகுதி அளவைகள். ஆங்கிலத்தில் அவைகள் குரூப் டெஸ்ட்ஸ் (Group tests) என்று சொல்லப்படுகின்றன. இப்பொழுது, நம் பள்ளிக்கூடங்களில் நடத்தப்படும் பரீக்ஷைகள் தொகுதியளவை முறையில்தான் நடத்தப்படுகின்றன. மேலும், சேனைகளில் தகுந்த வீரர்களைத் தேர்ந்தெடுத்தலும் இம்முறைபற்றியே நடக்கின்றது. இந்தத் தொகுதி யளவைக்கு ஒரு எடுத்துக்காட்டைக் குறிப்பிடுவோம். சில சொற்களை முறைமாற்றிக் கூறி அவைகளை ஒரு பொருளுள்ள வாக்கியமாக அமைக்கு மாறு வினவுதல், 'பல பொருள் ஒரு சொல்' சில கூறி, அவைகளில் இன்னின் னவைகளை இன்னின்ன பொருள்களில் பயன்படுத்தலாம் எனக் கூறும்படி யாக வினவுதல், செப்புக் கம்பியை மின்சாரக் கம்பியாகப் பயன்படுத்தல் ஏன் என்பதுபோன்ற சில பொதுக் கேள்விகளை வினவுதல் முதலியன சேனை வீரர்களைத் தேர்ந்தெடுக்க உபயோகப்படுத்தப் படுகின்ற தொகுதி யளவையின்பாற்பட்டன. எந்தெந்த சமயங்களில் வீரர்களை எந்தெந்த வியூகமாக அமைக்கவேண்டும் என்பதும், காலாட்படையைத் தாக்குவதெப்படி, குதிரைப் படையைத் தாக்குவதெப்படி என்பனவும் தொகுதியளவையின் பாற்பட்டனவேயாம். இத்தொகுதியளவையில் தேர்ச்சியடைந்தவரை அறிவு மிகுதியினர் எனக் கருத வேண்டும். அரசாங்க உத்தியோகங்களுக்கு ஆச்ரயிக்கும் பலருள் சிலரைத் தேர்ந்தெடுத்தலும் தொகுதியளவையின் மூல மாகவே.

## மக்கள் தொகையும் அறிவின் ஏற்றத்தாழ்வும்

மக்கள் யாவரும் ஒரே அளவுபட்ட அறிவினராக இருப்பதில்லை. பள்ளிக்கூட மாணவர்களை ஆராய்வோம். 100-க்கு 60பேர் சராசரி அறிவுள்ளவர்களாகவும் 20 பேர் மந்த அறிவுள்ளவர்களாகவும் 20பேர் கூரிய அறிவுள்ளவர்களாகவும் இருக்கின்றார்கள். மேலே, ஒருவனுடைய உள்ள வயதை உடல் வயதால் வகுத்தால் பெறப்படும் எண் அறிவெண் என்று கூறியிருக்கின்றோம். அவ்வறிவு எண்ணை அடிப்படையாக வைத்துக்கொண்டு மக்களை 9 வகையாக வகுக்கலாம். அவ்வகைகளாவன முறையே, (1) மடையன், (2) பேதை, (3) மூடன், (4) மட்டி, (5) மந்தன், (6) சமன், (7) கூரியன், (8) அதி கூரியன், (9) அறிவன் என்பன. இவை ஆங்கிலத்தில் முறையே இடியட் (Idiot), இம்பிஸைல் (Imbecile), மோரான் (Moron), பார்டர் லைன் கேஸ் (Borderline case), டல் (Dull), ஆவரேஜ் (Average), ஸுபீரியர்

(Superior), வெரி ஸூபீரியர் (Very Superior), ஜீனியஸ் (Genius) என்பன. மக்கள் எடையாலும் உயரத்தாலும் ஒருவர்க்கொருவர் வேற்றுமைப் படுவதைப்போலவே அறிவாலும் வேற்றுமைப்படுகின்றார்கள். மல்யுத்தம், கைச்சண்டை முதலிய சமயங்களில் மிகவும் உயரமான ஒருவனையும் குள்ளமான ஒருவனையும் இணைப்படுத்துவதில்லை. ஏறக்குறைய சம எடையும் சம உயரமும் உள்ள இருவரையே இணைப்படுத்துவது வழக்கம். ஒன்று அல்லது இரண்டு பவுண்டு நிறை ஏற்றத் தாழ்விருந்தாலும், ஒன்று அல்லது அரை அங்குலம் உயர ஏற்றத் தாழ்விருந்தாலும் சம எடையுள்ளவர்களாகவும், சம உயரமுள்ளவர்களாகவுமே கருதப்பட்டு மல்யுத்தர்கள் இணைப்படுத்தப் படுவது வழக்கம். அப்படிப்போல அறிவுத் துறையில் மடையனையும் பேதையையும் வேற்றுமைப் படுத்துவது கடினம் ; மட்டியையும் மந்தனையும் வேற்றுமைப்படுத்துவது கடினம்; கூரியனையும் அதிகூரியனையும் வேற்றுமைப்படுத்துவது கடினம்; கொள்கையளவில் மக்களை ஒன்பது வகையாகப் பகுத்ததே தவிற வேறல்ல. அதிகூரியனையும் மடையனையும் வேறுபடுத்தியுணரலாம்: ஆனால் கூரியனையும் அதிகூரியனையும் வேறுபடுத்தி யுணர்வது மிகவும் கடினம்.

அறிவு எண் மாறாமை

10 வயதுப் பையன் ஒருவனது உள்ள வயது 8 என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுது அவனது அறிவு எண் 8/10 ஆகின்றது. அதாவது 80 நூற்றுப் பங்கு. இச்சிறுவன் 20 வயதுடைய இளைஞனாகின்ற காலத்தில் இவனது அறிவு எண் 80 நூற்றுப்பங்காக விருக்குமா? அல்லது அதிகரிக்குமா? அல்லது குறையுமா? என்பது கேள்வி. உள்ள நூல் வல்லார் இவ்விஷயத்தில் பெரிதும் ஆராய்ச்சி செய்திருக்கின்றார்கள். சில ஆராய்ச்சிகளைக் கீழே குறிப்பிடுவோம்.

கீழே ஆறு வயதிலிருந்து பன்னிரண்டு வயது வரையில் ஒரு பெண்ணின் அறிவு எண்களின் தன்மை விளக்கப்படுகின்றது. இவள் அறிவு சராசரிக்குக் குறைவுபட்டது.

| முறைகள் | உடல் வயது. | | | | உள்ள வயது, | | | | அறிவு எண் (நூற்றுப் பங்கில்) |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| முறை ஒன்று | 6 | ஆண்டு, | 8 | திங்கள். | 5 | ஆண்டு | 6 | திங்கள் | 83 |
| முறை இரண்டு | 7 | ” | 1 | ” | 5 | ” | 4 | ” | 75 |
| முறை மூன்று | 8 | ” | 2 | ” | 6 | ” | 10 | ” | 84 |
| முறை நான்கு | 8 | ” | 7 | ” | 7 | ” | 0 | ” | 81 |
| முறை ஐந்து | 12 | ” | 10 | ” | 9 | ” | 10 | ” | 79 |

அப் பெண்ணின் அறிவு எண் சராசரி 80 நூற்றுப் பங்காக இருக்கின்றது. வயது ஏறுவதால் அறிவு எண் அதிகமாக உயர்வதில்லை. “விளையும் பயிர் முளையிலே” என்னும் பழமொழி உண்மையாகவே இருக்கின்றது.

மற்றொரு பெண்ணின் அறிவு எண்ணின் தன்மை கீழே விளக்கப்படுகின்றது. இவள் சம அறிவுள்ளவள்.

| முறைகள் | உடல் வயது | உள்ள வயது | அறிவு எண் (நூற்றுப் பங்கில்) |
|---|---|---|---|
| முறை ஒன்று | 6 ஆண்டு 6 திங்கள். | 6 ஆண்டு 10 திங்கள். | 105 |
| முறை இரண்டு | 7 " 2 " | 6 " 10 " | 95 |
| முறை மூன்று | 8 " 3 " | 8 " 10 " | 107 |
| முறை நான்கு | 9 " 6 " | 9 " 7 " | 101 |
| முறை ஐந்து | 12 " 8 " | 13 " 1 " | 103 |

இப்பெண்ணின் அறிவு எண் சராசரியாக 100 நூற்றுப் பங்காக இருக்கின்றது. வயது ஏறுவதால் அறிவு எண் அதிகப்படவில்லை.

பிறிதொரு பெண்ணின் அறிவு எண் கீழே ஆராயப்படுகின்றது. இவள் கூரிய அறிவுள்ளவள்.

| முறைகள் | உடல் வயது | உள்ள வயது | அறிவு எண் (நூற்றுப் பங்கில்) |
|---|---|---|---|
| முறை ஒன்று | 4 ஆண்டு 9 திங்கள். | 6 ஆண்டு 8 திங்கள். | 140 |
| முறை இரண்டு | 7 " 4 " | 10 " 4 " | 141 |
| முறை மூன்று | 10 " 9 " | 13 " 1 " | 140 |

இப்பெண்ணின் சராசரி அறிவு எண் 140 நூற்றுப் பங்காக விருக்கின்றது. வயது உயர்வதால் அறிவு எண் உயர்வதில்லை என்பது தெளிவாகப் புலனுகின்றது. மேலேகாட்டியுள்ள திட்டங்களால், ஒருவருடைய அறிவு எண் வயது ஏற ஏற அதிகப்படுவதில்லை என்ற உண்மை புலனுகின்றது.

## அறிவு வளர்ச்சியும் வயதும்

வயது ஏற ஏற அறிவு வளர்ந்துகொண்டே போகின்றதா? இல்லையா? எவ்வயது வரையில் அறிவு வளர்கின்றது? என்பன போன்ற கேள்விகளுக்கு நாம் விடைகூற முயலவேண்டும். மனிதனுக்கு உடல் பலம் ஒரு குறிப்பிட்ட வயது வரையில் ஆண்டுதோறும் வளர்ந்து கொண்டேபோய், பிறகு ஆண்டு தோறும் குறைந்துகொண்டே போகும். இம்முறையில் அறிவும் வளர்ந்து குறைகின்றதா? என்றும் ஆராய்வோம்.

சிறுவர்களுடைய அறிவை அளக்க இயல்வதைப்போல முதியவர்களுடைய அறிவை அளக்க இயல்வதில்லை. எனவே முதியவருடைய அறிவின் வளர்ச்சியையும் அளக்க இயல்வதில்லை. இந்நிலைமைக்குக் காரணம் யாது எனப் பார்க்குமிடத்து, மக்களுடைய பலதிறப்பட்ட வேற்றுமையே காரணமாகத் தோன்றுகின்றது. முதியவர்களுள் பல தொழில் வேற்றுமைகள் இருக்கின்றன. ஆகவே அவர்களுடைய பொதுஅறிவை அளக்க முடியவில்லை. ஒரு உழவனுடைய அறிவையும் ஒரு கருமானுடைய அறிவையும் ஒத்திட்டு அளக்க முடியாது. அவனவன் அவனவனுடைய தொழில் முறையில் அறிவாளியாக இருப்பான். உழவர் சமூகத்தின் பொதுஅறிவையும் கருமார் சமூகத்தின் பொதுஅறிவையும் தனித்தனியாக அளந்தறியலாம். ஆனால் உழவர்களையும் கருமார்களையும் ஒப்பாகவைத்து அவர்களுடைய பொதுஅறிவை

அளக்க முடிவதில்லை. எனவே முதியவனுடைய பொதுஅறிவு வயது ஏற ஏற அதிகரிக்கின்றதா என்று அறிய முடியாது. 3 வயதிலிருந்து 14 வயது வரையில் உள்ள சிறுவர் சிறுமிகளுடைய பொது அறிவை அளக்க நாம் அறிவளவைத் திட்டங்களை அமைக்கலாம். ஆனால், 14-க்கு மேற்பட்ட, 30 அல்லது 40 வயதுள்ள முதியவர்களுடைய பொதுஅறிவை அளக்க அறிவளவைத் திட்டங்களை நாம் ஏற்பாடு செய்ய முடியாது. ஏனெனில் அம்முதியவர்கள் பலதிறப்பட்ட தொழில்களில் நுழைந்து விட்டபடியால் அவர்களுக்கு இன்னின்ன விஷயங்கள் தாம் பொதுஅறிவின்பாற் பட்டன என்று நிர்ணயிக்க முடியாது.

உள்ள நூற் புலவர்கள் இத்துறையில் பல ஆராய்ச்சிகள் செய்திருக்கின்றார்கள். சிலர் ஆராய்ந்ததன் பயனாக 14 வயதுக்கு மேற்பட்ட மக்களின் பொதுஅறிவை அளக்க முடியாது என்ற கொள்கை உண்டாயிற்று. சில புலவர்கள் 18 அல்லது 20-க்குமேல் மக்களுடைய அறிவை அளக்க இயலாது என்று துணிகின்றார்கள். ஆயின் 20 வயதுக்குமேல் மனிதனுடைய அறிவு வளர்வதில்லையா? என்ற கேள்வி பிறக்கின்றது. அறிவு வளர்வதில்லை என்று கூற முடியாது. அறிவு வளர்ந்துக்கொண்டுதான் போகின்றது. ஆனால் இவ்வளர்ச்சி காரிய ரூபமாக விருக்கின்றது. 20 வயது வரையில், தான் பெற்ற அறிவை மனிதன் அவ்வயதுக்குமேல் தன் காரியசித்திகளுக்குப் பயன் படுத்திக்கொள்கின்றான். எவன் ஒருவன் தன் அறிவைக் காரியசித்திக்குப் பயன்படுத்திக் கொள்ளாமல் வாளா இருக்கின்றானோ அவன் அறிவாளியாகக் கருதப்பட மாட்டான். 20 வயது வரையில் மனிதன் தன் அறிவால் தன் அனுபவத்தை விருத்தியாக்கிக் கொள்கின்றான். அதற்கு மேல் அவ்வனுபவத்தைக் காரியசித்திக்குப் பயன்படுத்திக் கொள்கின்றான்.

## தொழில் முறைகளும் அறிவின் அளவும்

ஒரு மனிதன் தனக்கெனத் தேர்ந்தெடுக்கும் தொழிலின் தன்மையால் அவன் அறிவின் அளவை அறியலாம். வண்டி இழுத்தலைத் தன் தொழிலாகத் தேர்ந்தெடுப்பவன் சாதாரணமாக அறிவில் குறைந்தே யிருப்பான். துப்பறியும் தொழிலையோ ஆசிரியன் தொழிலையோ தன் தொழிலாகத் தேர்ந்தெடுப்பவன் சாதாரணமாக அறிவில் அதிகப்பட்டே யிருப்பான். பலவகைப் பட்ட தொழிலாளர்களின் மக்களுடைய அறிவை நாம் ஆராய்ந்தால் தொழிலின் தன்மைக்கும் அறிவின் அளவுக்கும் உள்ள தொடர்பு தெளிவாக விளங்கும். வண்டி வலிப்போர்களின் சிறுவர்களைவிட உயர்ந்த உத்தியோகஸ்தர்களுடைய சிறுவர்கள் அதிக அறிவுள்ளவர்களாகவே இருக்கின்றார்கள். ஒரு பட்டினத்தில் உள்ள பலவகைச் சிறுவர்களை ஆராய்ந்து பெற்ற முடிவைக் கீழே குறிப்போம்.

| தகப்பனார்களின் தொழில். | அறிவு எண் (நூற்றுப் பங்கில்) |
|---|---|
| உத்தியோகஸ்தர்கள் | 112 |
| காரிய நிர்வாகிகள் | 110 |
| குமாஸ்தாக்கள் | 110 |
| கடைக்காரர்கள் | 106 |
| தொழிற்சாலை மேஸ்திரிகள் | 103 |

| தகப்பனார்களின் தொழில். | அறிவு எண் (நூற்றுப் பங்கில்) |
|---|---|
| சாமர்த்தியத் தொழிலாளிகள் | 100 |
| சாதாரணத் தொழிலாளிகள் | 96 |
| காட்டுப்புற உழவர்கள் | 98 |

ஒரு சிறுவனுடைய அறிவு அவனுடைய தகப்பனின் அறிவுடன் தொடர்புடையதாய் இருப்பதேன்? கைத்தொழில் செய்வான் ஒருவனுடைய மகன் உயர்ந்த உத்தியோகம் செய்வான் ஒருவனுடைய மகனைவிட அறிவில் குறைவுபட்டிருப்பதேன்? இக் கேள்விகளுக்கு விடை கூற முயல்வோம். தகப்பனாரின் தொழிலின் தன்மைக்கும் மகனின் அறிவின் அளவுக்கும் உள்ள தொடர்பு இரண்டு காரணங்களால் ஏற்பட்டது. ஒரு காரணம் வம்ச வான்முறை; மற்றொரு காரணம் சுற்றம். இவை ஆங்கிலத்தில் ஹெரிடிடி (Heredity) என்றும், என்விரன்மெண்ட் (Environment) என்றும் சொல்லப்படுகின்றன. வம்ச வான்முறை காரணத்தைப் பற்றி ஆராய்வோம். உயர்ந்த உத்தியோகஸ்தனுடைய மகன் கருவிலேயே உயர்ந்த அறிவின் விதையைக் கொண்டவனாக விருக்கின்றான். உயர்ந்த உத்தியோகஸ்தன் எப்பொழுதும் அறிவுத் தொடர்பான விஷயங்களிலேயே மனதைத் தோயவிட்டிருப்பவன். அறிவின் நுணுக்கம் அவன் இரத்தத்திலும் வெண்பாலிலும் ஊறிக்கிடக்கின்றது. ஆகவே அவனுக்குப் பிறக்கும் பிள்ளை சாதாரணமாக அதிக அறிவையே பெற்றிருக்கும். வட்டித் தொழிலாளன் அல்லது வண்டி இழுக்கும் தொழிலாளன ஒருவனது உள்ளம் எப்பொழுதும் அறியாமையில் மூழ்கி யிருக்கும். அவனது இரத்தமும் வெண்பாலும் அறியாமை வித்தையே பெற்றிருக்கும். எனவே அவனுக்குப் பிறக்கும் பிள்ளை மந்தனாகவோ மடையனாகவோ இருப்பான்.

இனி, சுற்றம் என்னும் காரணத்தைப்பற்றி ஆராய்வோம். உயர்ந்த உத்தியோகஸ்தனுடைய வீட்டுக்கு வருவாரும் நல்ல அறிவுள்ளவர்களாகவே இருப்பார்கள். அவனுடைய வீட்டில் இருக்கும் பொருள்களும் அறிவைத் தூண்டக்கூடியவைகளாக இருக்கும். இவ்வித நிலைமையைத் தனக்குச் சுற்றமாக உடைய சிறுவன் நாளாவட்டத்தில் அறிவில் அதிகப்பட்டே வளர்வான். தாழ்ந்த தொழிலாளியின் வீட்டுக்கு வருவாரும பந்துக்களும் சாதாரணமாக சிற்றறிவுடையவர்களாகவே இருப்பார்கள். அவனுடைய வீட்டில் காணப்படும் பொருள்களும் அறிவு விளக்கத்தை உண்டாக்கக் கூடியனவாக இரா. இவ்வித நிலைமையைத் தனக்குச் சுற்றமாக உடைய சிறுவன் சாதாரணமாக மந்தனாகவே இருப்பான்.

இப்பொழுது சில புதிய கேள்விகள் உண்டாகின்றன. உயர்ந்த வம்ச வான்முறை யிருந்து தீயசுற்றம் இருந்தால் சிறுவனுடைய அறிவு அதிகப் பட்டிருக்குமா? குறைவு பட்டிருக்குமா? தாழ்ந்த வம்ச வான்முறையிருந்து உயர்ந்த சுற்றம் இருந்தால் சிறுவனுடைய அறிவு அதிகப்பட்டிருக்குமா? குறைவு பட்டிருக்குமா? இக்கேள்விகளைப்பற்றி ஆராய்ந்து பார்த்தால் நமக்கு ஒரு உண்மை விளங்குகின்றது. அதாவது வான்முறை மட்டும் உயர்ந்திருந்து சுற்றம் தாழ்ந்திருந்தாலும் சுற்றம் மட்டும் உயர்ந்திருந்து வான்முறை தாழ்ந்திருந்தாலும், சிறுவர்களுடைய அறிவு அதிகப்பட்டிருக்

காது என்பதே. சாதாரணமாக, ஒரு சிறுவனது உயர்ந்த அறிவுக்குக் காரணங்களாக விருப்பன இவ்விரண்டுமே. சில சமயங்களில் வான்முறையும் சுற்றமும் ஏற்றத்துடன் இருந்தும் சிறுவன் மடையனாக விருப்பதும், வான் முறையும் சுற்றமும் தாழ்ந்திருந்தும் சிறுவன் அதிகூரியனாக இருப்பதும் உண்டு.

## வளர்ப்புப் பிள்ளைகளின் அறிவு

வளர்ப்புப் பிள்ளைகளின் வான்முறையும் சுற்றமும் வேற்றுமைப் பட்டிருக்கும். ஏனென்றால் ஒரு தாய் தகப்பன்மாரின் பிள்ளை பிறிதொருவரால் வளர்க்கப்படுகின்றது. இப்பொழுது நாம் ஆராயவேண்டிய விஷயம், இப்பிள்ளையின் அறிவு தாய் தகப்பன்மாரின் வான் முறையைப்பற்றி வளருமா? அல்லது வளர்ப் பிடத்தின் சுற்றத்தைப்பற்றி வளருமா? என்பதே. பொதுவாக, வளர்ப்புப் பிள்ளைகள் அறிவிலும் நடத்தையிலும் விளங்கி யிருக்கவே நாம் காண்கின்றோம். ஆராய்ச்சியின் பயனாக நாம் அறிவது யாதெனில், ஒரு வளர்ப்புப் பிள்ளையின் அறிவு அளவு, வான் முறைப் பயனுக்கு அதிகப்பட்டும் சுற்றப்பயனுக்குக் குறைவு பட்டும் இருக்கின்றது என்பதே. தகப்பன் வீட்டிலேயே வளர்ந்திருந்தால் அப் பிள்ளையின் அறிவு எவ்வளவில் இருக்குமோ அவ்வளவுக்கு அதிகப்பட்டும், வளர்ப்பிடத்திலேயே பிறந்திருந்தால் அப்பிள்ளையின் அறிவு எவ்வளவில் இருக்குமோ அவ்வளவுக்குக் குறைவு பட்டும் இருக்கின்றது என்பது ஆராய்ச்சியின் முடிவு. மிகவும் சிறு வயதிலேயே, பிறப்பிடத்தை விட்டு வளர்ப்பிடத்தைச் சேர்ந்து விட்ட பிள்ளையின் அறிவளவு முது வயதில் பிறப்பிடத்தை விட்டு வளர்ப்பகத்தைச் சேர்ந்த பிள்ளையின் அறிவளவை விட அதிகப்பட்டிருக்க நாம் ஆராய்ச்சியில் காண்கின்றோம். இதனால் நமக்குப் புலனாகின்ற உண்மையாதெனில், குழந்தைகளின் அதி பாலிய வயதில்தான் அறிவின் அளவும் நடத்தையின் தன்மையும் நிச்சயிக்கப் படுகின்றன என்பதே. இதையொட்டியே அவ்வைப் பிராட்டியாரும் "இளமையிற் கல்" என்று கூறியருளினர் போலும்.

கலியாணமாகாத மடைந்தையரின் குழந்தைகளைப்பற்றி நாம் ஆராயுமிடத்து நமக்கு விளங்குகின்ற உண்மை ஒன்று உண்டு. திக்கற்ற குழந்தைகளுக்கென அமைக்கப்பட்ட தரும சாலைகளில் வளர்க்கப்படும்.மேற்கண்ட கலியாணமாகா மடைந்தையரின் குழந்தைகளின் அறிவு எண் சராசரிக்கு மேற்பட்டேயிருக்கின்றது.

வளர்ப்புப் பிள்ளைகளின் அறிவைப் பற்றி இறுதியாக நாம் கூறவேண்டியது யாதெனில்,

(1) சராசரி வான் முறைப் பயனும் சராசரி சுற்றப் பயனும் உள்ள குழந்தைகளின் அறிவு எண் 100 நூற்றுப் பங்கு.

(2) மேற்பட்ட வன்முறைப் பயனும், மேற்பட்ட சுற்றப்பயனும் உள்ள குழந்தைகளின் அறிவு எண் 115 நூற்றுப் பங்கு.

(3) சராசரி வரன் முறைப் பயனும், மேற்பட்ட சுற்றப்பயனும் உள்ள குழந்தைகளின் அறிவு எண் 104-107 நூற்றுப்பங்கு.

வளர்ப்புப் பிள்ளையின் அறிவைப்பற்றிய ஆராய்ச்சி இன்னும் ஒரு முடிவடைய வில்லை. எனவே நாம் அவ் விஷயத்தைப் பற்றி ஒரு திட எண்ணத்துக்கு வர முடியாது.

## மாணவர்களின் அறிவு

இவ்விஷயத்தைப் பற்றி உள்ள நூற் புலவர் ஒருவர் செய்த ஆராய்ச்சியை இங்கே குறிப்பிடுவோம். ஒரு பள்ளிக் கூடத்தில் இரண்டு வகுப்புக்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றிலும் 8 வயதுள்ள 20 பிள்ளைகள் இருக்கின்றார்கள். ஒரு வகுப்பில் உள்ள மாணவர்களின் அறிவு எண் 165. மற்ற வகுப்பில் உள்ள மாணவர்களின் சராசரி அறிவு எண் 146. எல்லா மாணவர்களுக்கும் நல்ல உயர்ந்த சுற்றத்தின் பயன் உண்டு. இம் மாணவர்களை மூன்று ஆண்டுகளாக அங்கே இருந்த நிபுணர் ஆராய்ச்சி செய்தார். ஒவ்வொரு மாணவனும், யாதொரு அதிகாரத்துக்கும் உட் படுத்தப்படாமல் நல்ல ஆசிரியர்களின் மேற்பார்வையில் அறிவு வளர விடப்பட்டனர். மூன்று ஆண்டுகள் ஆராய்ந்ததன் பயனாக சில உண்மைகள் தீர்மானிக்கப் பட்டன. மற்ற வகுப்பு மாணவர்களை விட இவ்விரண்டு வகுப்பு மாணவர்களும் விரைவில் அறிவு ஏற்றமடைந்தார்கள். ஆனால் இவ்விரண்டு வகுப்புமாணவர்களையும் ஒரு வகுப்புக்கு ஒரு வகுப்பு ஒப்பிட்டால், 165 அறிவு எண் உள்ளவர்கள் 146 அறிவு எண் உள்ளவர்களை விட அறிவு மிகைப் பட்டவர்களாகவே விளங்கினர் இவ்வாராய்ச்சியால் நமக்கு விளங்குவது யாதெனில் சாதாரணமாக மாணவர்களுடைய பள்ளிக்கூட முன்னேற்றத்துக்கும் அவர்களது அறிவு எண்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதே. ஆனால் இத்தொடர்பு கீழ் வகுப்புக்களில்தான் காணப்படுகின்றது. மேல் வகுப்புக்களில் (அதாவது பீ. ஏ., இண்டர்மீடியேட்) இத் தொடர்பு காணப் படுவதில்லை. ஏனென்றால் மேல் வகுப்புக்களில் பரீக்ஷைகளில் தேர்ச்சியடையாத மாணவர்கள் அறிவில்லாமையால் தேர்ச்சி யடையாமல் போவதில்லை. அவர்கள் ஊக்கக் குறைவாலும் மற்ற காரணங்களாலுமே பரீக்ஷைகளில் தவறி விடுகின்றார்கள். எனவே மேல் வகுப்புக்களில் உள்ள மாணவர்களின் அறிவு எண்களைக்கொண்டு அவர்களுடைய கல்லூரி சம்பந்தமான முன்னேற்றங்களை யூகிக்க முடியாது.

## அறிவும் ஒழுக்கமும்

உயர்ந்த அறிவுள்ளவன் ஒருவன் அறிவுக்கு இடமில்லாத ஒரு வேலையில் அமர்த்தப்பட்டால், அவன் விரைவில் மந்த குணங்களையும் தீய குணங்களையும்

உடையவனாகி விடுகின்றான். ஆறும் வகுப்புக்கு ஏற்ற அறிவுள்ள சிறுவனை நான்காம் வகுப்பில் வைத்தால் அவன் குறும்புள்ளவனாகவும் துணிச்சல் உள்ள வனாகவும் மாறி விடுகின்றான். அவ்வாறே நான்காம் வகுப்புக்கு ஏற்ற அறி வுள்ள சிறுவன் ஒருவனை ஆறும் வகுப்பில் வைத்தால் அவன் சோம்பேறியாக வும் பள்ளிக்கூடத்திலிருந்து ஓடிப்போகின்ற தன்மை யுடையவனாகவும் மாறி விடுகின்றான். பல பெரிய குற்றவாளிகள் தங்கள் பள்ளிக் கூட காலங்களில் இவ்வாறு வகுப்பை விட்டு ஓடிப்போகப் பழகிப் பழகியே பிறகு பெருங் குற்ற வாளிகளாக மாறிவிட்டதாகத் தெரிகின்றது. இதற்குக் காரணங்கள் இரண்டு. மந்த அறிவுடைமை ஒன்று. சமூகக் கட்டுப்பாட்டின் தன்மை மற்றொன்று. நான்கு அல்லது ஐந்துமணி நேரம் ஒரு வகுப்பில் உட்கார்ந்துகொண்டு தனக் குப் பிடித்தமில்லாத விஷயங்களைக் கேட்டுக்கொண் டிருத்தல் சில மாணவர் களுக்கு ஏற்காது. இத்தகையவர்கள் சாதாரண குறுகிய அறிவுள்ளவர்களாயின் குற்றவாளிகளாக மாறுவதும், பெருகிய அறிவுள்ளவர்களாயின் பெருந் தேசிய வீரர்களாகவும் தலைவர்களாகவும் அறிஞர்களாகவும் மாறுவதும் இயற்கை. அறிவுக்கும் ஒழுக்க மின்மைக்கும் உள்ள தொடர்பு நிச்சயிக்கப்படுவதற்கு மிக வும் கடினமானது. சில சமயங்களில், மிகவும் குறைந்த அறிவுள்ளவர்கள் உயர்ந்த ஒழுக்க முள்ளவர்களாகவும், மிகவும் பெருகிய அறிவுள்ளவர்களாகவும் இருக்கின்றார்கள். எனவே, அறிவின் குறைவே நல்லொழுக்கமின்மைக்கும் காரணம் என நிச்சயிக்க வியலாது.

## அறிவைப் பற்றிய ஆராய்ச்சி

அறிவு என்பது யாது? என்று நாம் இனி ஆராயவேண்டும். நாம் எடை களை அளந்தறிகின்றோம். ஆனால் எடை என்பது யாது எனக் கேள்வி பிறந் தால் நாம் விடை கூற கஷ்டப்படுகிறோம். அவ்வாறே, நாம் அறிவை அளக் கலாம். ஆனால் அறிவு என்பது யாது? எனக் கேள்வி பிறக்கு மிடத்து நாம் விடைகூறக் கஷ்டப்படுகிறோம். அறிவு என்பது நாம் அனுபவத்தில் கற்ற உண்மைகளை மனத்தில் பதித்து வைத்து, சமயம் வந்தபோது அவ்வுண்மை களை நன்முறையில் பயன் படுத்திக் கொள்ளுதலாம். புதிய சந்தர்ப்பங்களில் பழைய அனுபவங்களை ஏற்றவாறு மாற்றிப் பயன் படுத்திக் கொள்வதுதான் அறிவின் தன்மை,

அறிவு வளர்ச்சிக்குச் சாதகமான சில நிகழ்ச்சிகளை இங்கே குறிப்பிடு வோம். (1) சுறு சுறுப்பு, (2) பசி, (3) ஞாபகம், (4) விழிப்பு நிலை முதலியன.

அறிவுக்கும் காரியங்களை விரைவாகச் செய்யும் தன்மைக்கும் தொடர்பு உண்டு. பத்துச் சிறுவர்களுக்கு அறிவளவைப் பரீக்ஷையும், விரைவுப் பரீக்ஷை (Speed Test) யும் நடத்த வேண்டும். பிறகு முறை வாரியாகச் சிறுவர் களை அமைக்கவேண்டும். அதாவது அறிவளவில் முதலவன் யார்? இரண்டாமவன் யார்? என வரிசைக் கிரமமாகவும் விரைவு அளவையில் முதலவன் யார்? இரண்டாமவன் யார்? என வரிசைக் கிரமமாகவும் குறிக்க வேண்டும். இவ்விரண்டு வரிசைக் கிரமங்களும் ஒத்திருக்கின்றனவா எனப் பார்க்க வேண்டும். இவ்வாறு செய்த பல ஆராய்ச்சிகளின பயனாக உள்ள நூற் புலவர் பெற்ற முடிவு யாதெனில், பொதுவாக அறிவு வரிசைக் கிரமமும் விரைவு வரிசைக் கிரமமும் ஒத்தே யிருக்கின்றன என்பது.

---

# ரிஸர்வ் பாங்கு ஏற்பாடு.

(ஒரு அறிஞர்.)

இந்தியாவில் ரிசர்வு பாங்கு ஏற்படுத்தக் காரணமென்ன? அப்படிச் செய்யப் போதுமான அளவு தங்கச் சேமிப்பு (Gold Reserves) இவ்விடம் உண்டா? இல்லை என்றால் அப்படிப்பட்ட ரிசர்வு களைச் சேமிக்க, இந்தியாவில் நாணயங்களாகச் செலாவணி செய்யப்படாமல் ஆபரணார்த்தமாக உபயோகப்பட்டு வரும் தங்கங்களை வாங்குவது உசிதமா? என்ற பல கேள்விகளுக்கு இந்தியாவிலுள்ள அநேக பாங்கர்கள் பதில் எதிர் பார்க்கிறார்கள்.

வெள்ளைக் காகிதம் (White Paper) வெளிவந்ததின் பயனாக இந்தியா வின் புதிய அரசியல் அமைப்பு (New Constitution) தயாராகும் இந்தக் காலத் தில் இந்தியாவில் ஒரு ரிசர்வு பாங்கு ஏற்படுத்தும் விஷயம் முக்கியமானதாக இருக்கிறது. புதிய அரசியல் அமைப்பு விஷயத்தில், முக்கியமாக, இந்தியா வுக்கு ஒரு ரிசர்வு பாங்கு ஏற்படுத்துதல் அவசியம் என்றும், புதிய திட்டங்கள் ஏற்படுவதினிடையில்-இந்தக் காலத்திலேயே ஒரு ரிசர்வு பாங்கு சட்டம் பாஸ் செய்ய வேண்டியது முக்கியம் எனவும், கனம் வைசிராய் அவர்கள் சென்ற பிப்ரவரிமாதம் 1-ந் தேதி கூடிய புது டெல்லி சட்டசபை (Assembly)யின் ஆரம்பத்தில் தெரிவித்துள்ளார். இது ஆராய்ச்சி விஷயமாக நாம் முதலில் அறிந்துகொள்ளவேண்டியது. ரிசர்வு பாங்கு என்றால் என்ன? அத னுடைய அலுவல்கள் என்ன? அதை ஏற்படுத்துவது எப்படி? என்ற பல விஷ யங்களைக் கவனிக்க வேண்டும்.

நவீன மாறுதல்களின் பயனாக ஏற்பட்ட ஒரு எண்ணம் இந்தியாவுக்கு ஒரு மத்திய ரிசர்வ் பாங்கு (Central Reserve Bank) ஏற்படுத்த வேண்டும் என்பதே. இந்தியாவின் கரென்ஸி கையாளும் பழக்கத்தைச் சரியான அதிகாரம் வாய்ந்த-பணப்பொறுப்புப்பெற்ற ஒரு மத்திய ஸ்தாபனத்தினிடம் ஒப்புவித்து, ஒழுங்குபெற நடத்த முயலுதல் முக்கியமானதொரு நோக்கம். அதாவது, அந்த ஸ்தாபனம் கொடுக்கல் வாங்கல் முதலிய காரியங்களுக்குப் பிரயோசனப் படக்கூடிய நாணயச் செலாவணியை (Currency) தேவையானபடி ஏற்படுத்தி அதை நடத்துவது அவசியம். மேலும் சர்க்காரிடமும் (Government) இதர பாங்குகளிடமும் அதன் கிளை ஸ்தாபனங்களிலும் உள்ள கையிருப் புத் தொகைகளையும், ரிசர்வுகளையும் சேகரித்து, அதன் மூலம் இந்தியா வுக்குப் போதுமானபடி நாணய செலாவணியை அதிகப் படுத்தவோ குறைக் கவோ (to expand or contract currency) செய்து, விலை வாசிகளை சரியான ஊர்ஜித நிலையில் (to maintain the price level) இருக்கச் செய் வது முக்கிய நோக்கமாக யிருத்தல் வேண்டும். நெருக்கடியான காலத்திலும்— கூடியவரையில் அவசரத்தை அனுசரித்து நாணய வசதிகளைச் செய்து கொடுத் தலும் (to create emergency credit) விசேஷ மேற்பார்வையுடன் நடப்பித் தலும் ஆகிய அலுவல்களைச் செய்வதே இந்த ஸ்தாபனத்தின் நோக்கமாகும்.

உண்மையில் 1920-ம் வருஷத்தில் உலக பொருளாதார மகாநாட்டில் உலகத்திலுள்ள ஒவ்வொரு முக்கியமான தேசமும், அந்தந்த தேசத்துக்

கென்றே ஒவ்வொரு சென்ட்ரல் பாங்கை ஏற்படுத்துவது என்றும், எந்த இடங்களில் ஏறக்குறைய சென்ட்ரல் பாங்குகள் என்ற பெயருடன் விளங்கி வரும் ஸ்தாபனங்கள் இருக்கின்றனவோ அவைகளையும் நவீன நோக்கங்களுக்கு உட்படுத்தி விடும் ஏற்பாடுகள் செய்தல் வேண்டும் என்றும் தீர்மானிக் கப்பட்டது. அந்தப்படி தீர்மானிக்கப்பட்ட பிறகு, முக்கிய தேசங்களிலுள்ள அநேக பாங்குகள் இந்தப் புது நோக்கங்களுக்கு உட்பட்டு சீர்திருத்தங்கள் செய்யப்பட்டு வருகின்றன.

உள்நாட்டு செலாவணியாகிய (Internal Currency) ரூபாயின் மதிப்பைச் சரிவர நிரந்தரப் படுத்துவதும், இந்தியாவின் நாணய (Credit) நிலைமை, வியாபாரத்துக்கும், கைத்தொழிலுக்கும் உபயோகமாகும்படி உதவும் பண உதவி விஷயத்தில் வட்டி விகிதத்தை ஒழுங்கு படுத்துவதும் ஆகிய இந்த இரண்டு முக்கிய காரியங்களையும் செய்தல் வேண்டும் என்று மத்திய பாங்கு கமிஷனர் வற்புறுத்தி யுள்ளனர். மேலும் அவர்கள் ஏற்படுத் தும் ரிசர்வு பாங்கு லாபம் தேடும் எண்ணத்துடன் இதர கம்மர்ஷியல் பாங்கி களுடன் போட்டி யிடாதிருக்கவேண்டும் என்றும், ஆனல் தன் அலுவல்களி லொன்ருகிய நிரந்தரவட்டி விகிதத்தை ஸ்தாபிக்க வெளிப்படையாக முயற் சிக்கலாம் என்பதாகவும் அபிப்பிராயப்பட்டுள்ளனர்.

இந்த ரிசர்வு பாங்கு ஸ்தாபன ஏற்பாடு 1926-ம் வருஷத்தில் ஏற்பட்ட ஹில்டன் யங் கமிஷனல் சிபார்சு செய்யப்பட்ட போதனைகளில் ஒன்ரு கும். பணப்பழக்க நிரந்தர நிலைமையை (Stability of the Currency) அடைய வேண்டி ஒவ்வொரு தேசமும் தன் தேசத்திலுள்ள நாணய செலா வணியையும் (Currency) நாணய வசதியையும் (Credit) ஒருங்கே அமைத்து, ஒழுங்குபடச் செய்வதே முக்கியம் என்பதாக மேற்படி கமிஷனுக்கு விஷயதானம் புரிந்த அறிஞர்களின் அபிப்பிராயம். தற்சமயம் இந்தியா வில் தங்கள் தங்கள் நோக்கங்களில் வேறுபட்ட இரண்டு அதிகாரிகள் இருக்கின்றனர். அவர்கள் இந்திய கவர்ன்மெண்டின் செல்வ இலாகா ஒன்று, பண செலாவணி விஷயமாகவும், அதற்கு தேவையான சேமிப்பு விஷய மாகவும், பாத்தியஸ்தரான இந்தியா மந்திரி மற்றொருவர் ஆவர். பாங்கு களின் பாதுகாப்பு திரவியம் (Bank Reserves) இந்தியாவின் நாணய வசதி (Credit) க்கு ஒன்ருகப் பாத்தியப்பட்ட (Imperial Bank of India) விடம் இருக்கிறது. இது விஷயத்தில் இதற்கு உதவி புரிய இந்திய கவர்ன் மெண்டாரின் கையிருப்பு தொகைகள் (balances) ரெவினியூ டிரஷரிகளில் இருக்கும் சிறிது தொகைகள் போக மற்றவை இந்த இம்பீரியல் பாங்க ரால் கையாளப்பட்டு வருகின்றன. ஆனல் இந்த பாங்குக்கு, இந்தியாவுக்குச் சம்பந்தமான ஸ்டர்லிங் கையிருப்பிலும், கரன்ஸி பாதுகாப்பு (Currency Reservers) களிலும், யாதொரு விதமான அதிகாரமும் கிடையாது. எந்த நியாயமான பாங்கர்களும், இந்தியாவின் நாணய வசதி ஏற்பாட்டின்பொருட் டும் இந்தியாவில் பாங்கிகளின் அபிவிருத்தியை உத்தேசித்தும், இந்த ஏற் பாடு தகுந்ததல்ல என்று ஒப்புக்கொள்ளுவார்கள். எங்கும் ஒரே நிர்வாகம் இருக்கும் பக்ஷத்தில் ஆஸ்திகளின் பெரும் பாகத்தை ரிசர்வு அல்லது ஸெண்ட் ரல் பாங்கிகள் மூலம் பில்களை மாற்றுதல் (re-discount) செய்வதினல் ரொக்க மாக மாற்ற வசதி ஏற்படும். புதிய திட்டங்கள் ஏற்படுவதின் நிமித்தம் பேசப் பட்டவைகளில் இந்திய அரசியல் கமிஷன் அப்படிப்பட்ட ஒரு பாங்கை

ஏற்படுத்தும் எண்ணத்துடன் யாதொன்றும் பேசவில்லை. மூன்று வட்ட மேஜை மகாநாடுகள் கூட்டுவது அவசியமாக ஏற்பட்டதின் காரணமாக அவர்கள் அந்தப் பொறுப்பை முக்கியமானதாகக் கருதவில்லை போலும்.

இந்திய கவர்ன்மெண்டார், அதாவது கனம் வைசிராய் அவர்களும், அவரின் நிர்வாக சபையும் 1931ம் வருஷம் செப்டம்பர் மாதம் 20-ந் தேதி அரசியல் கமிஷன் ஏற்பாடுகளின் உத்தரவில் சொந்தமாகவாவது பொதுநன்மைக்காவது, தேவையான நாணயமாற்று வசதிகளைச் செய்து கொடுக்க, தாங்கள் சட்டப்படி பொறுப்பு பெற்றவர்களாக யிருப்பதாகவும், முறையை அனுசரித்து இது உசிதமல்ல வென்றும், மற்ற தேசங்களில் அனுசரிக்கப்பட்டு வருவதுபோல் இந்தியா சரியான வழியை பின்பற்ற வேண்டும் என்றும், அதற்காக நாணய செலாவணி பொறுப்பையும் (Currency) நாணய வசதிகளின் ஏற்பாட்டுப் பொறுப்பையும் (Credit obligation) ஒரு சென்ட்ரல் பாங்காரிடம் ஒருங்கே ஒப்புவித்து, சர்க்கார் உதவியன்னியில் நடைபெறச் செய்யவேண்டும் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். எல்லாத் தேசங்களிலும் நாணய செலாவணி அதிகாரம் நாட்டில் ராஜீய விஷயமான பொதுக்கிளர்ச்சிகளுக்கு உட்படாமல் செவ்வனே பொருளாதார வழிகளைப் பின்பற்றி நிர்வகிக்க வேண்டுமென்பது முக்கியமாக விருப்பதால் தாங்கள் சந்தேக மன்னியில் செம்மையான திட்டங்களுடன் ஒரு ரிசர்வு பாங்கு ஏற்படுத்துதல் வேண்டுமென்றும், அப்படி ஏற்படுத்துவது, இந்தியாவின் பொருள் சம்பந்தமான நிர்வாகத்தை பார்லிமெண்டின் ஏஜண்டுகளிட மிருந்து, இந்திய சட்ட சபைகளுக்குக் கீழ்ப்பட்ட ஓர் மந்திரியிடம் ஒப்புவிப்பதற்கு முன்னமே செய்யப்படவேண்டும் என்பதாகவும் தெரிவித்திருக்கிறார்கள். இந்த ரிசர்வு பாங்குக்கும், இங்கிலாந்திலுள்ள பாங்க் அப் இங்கிலாண்டுக்கும் சிறந்த ஒற்றுமை ஏற்படும் என்று இந்திய கவர்ன்மெண்டு எதிர்பார்க்கிறது. ஏனெனில் இந்தியா தன் நிலையை ஸ்தாபித்து நடைபெற வேண்டி இங்கிலாந்து பாங்கின் உதவியைத் தேடவேண்டியதாக இருக்குமாம்!

முதலாவது இரண்டாவது வட்டமேஜை மகாநாடுகளில் ரிசர்வு பாங்கு விஷயம் கவனிக்கப்பட்டது. ஆனால் இந்த மூன்றாவது மகாநாட்டில்தான் அதன் அத்தியாவசியம் உணரப்பட்டது. 1931-ம் வருஷம், ஜனவரி மாதம், 15-ந் தேதியில் பெடரல் அமைப்பு சப் கமிட்டியார், தம்முடைய இரண்டாவது ரிப்போர்டில் இந்தியாவின் நாணய நோட்டு செலாவணி நாணய உதவி இவைகளின் ஆதிக்கம் பெறவேண்டி, இராஜீய சம்பந்தமில்லாமல், ஒரு ரிசர்வு பாங்கு ஏற்படுத்த முயற்சிக்க வேண்டுமென்று தெரிவித்தார்கள். மூன்றாவது வட்டமேஜை மகாநாட்டில் பண சம்பந்தமான துறைகளிலும், நாணய செலாவணி விஷயத்திலும், பாதுகாப்புகள் (Safeguards) செய்ய ஒரு ரிசர்வு பாங்கு தேவை என்று அறிந்து, அது ஏற்படுத்தும் விஷயம், பெடரல் திட்டங்கள் அமுலுக்கு வருமுன் ஆரம்பிக்கப்படவேண்டு மென்பதாக முடிவுக்கு வந்தார்கள். அந்த பாங்கு ஒழுங்கான முறையில் நடந்து திருப்தியளிக்க வேண்டிச் சில திட்டங்களும் குறிக்கப்பட்டன. இந்தியாவின் வரவு செலவு நிரந்தரஸ்திதி (Budget Balance) ஒழுங்குபட வேண்டுமென்றும், இந்தியாவிலும் இங்கிலாந்திலுமுள்ள குறுகிய காலக்கடன் (Short dated debts) குறைக்கப்பட வேண்டுமென்றும், தேவையான பாதுகாப்பு திரவியம் சேமிக்கப்

பட வேண்டுமென்றும், இந்தியாவின் ஏற்றுமதி எப்பொழுதும் அதிகமாயிருக்கும் தன்மையை மறுபடி அடைய முயற்சிக்க வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டன. இந்தியாவுக்கு ரிசர்வு பாங்கு ஏற்படுத்தும் விஷயமாகவும், தேவையான பாதுகாப்பு திரவிய விஷயமாகவும், இந்தியாவிலுள்ள சகல ஜன சமூக அபிப்பிராயங்களை ஏற்றுக்கொள்ளத் தாம் முன் வந்திருப்பதாகவும் இந்தியா மந்திரி ஒப்புக்கொண்டார். தற்காலத்திய பொருளாதார நெருக்கடியை உத்தேசித்தால் அப்படி ரிசர்வு பாங்கு ஏற்படுத்துவதானது எப்பொழுது என்று சொல்ல முடியாததாக விருக்கிறது.

கனம் வைசிராய் அவர்கள் சொல்லியதில் மிக்க சாராம்சம் உண்டு. இந்தியாவிலிருந்து சமீபத்தில் தங்கம் ஏற்றுமதியானதால் இந்தியாவின் நாணய மாற்றுதல் (Exchange) மிக்க திருப்திகரமானதாக ஏற்பட்டிருக்கிறது. ஸ்டர்லிங் பாதுகாப்பு (Sterling Reserves) அதிகப்படவே இம்மாதிரி ஏற்றுமதி ஏற்பட்டது போலும். ஏற்றுமதி யன்னியில் இருந்த ஆஸ்திரேலியா, நியூஸீலண்ட், கானடா, டென்மார்க்கு முதலிய தேசங்களுடன் இந்தியாவை ஒப்பிட்டால் இந்தியா ஏராளமான தங்கம் ஏற்றுமதி செய்து, உள்நாட்டுச் சரக்குகளை ஏற்றுமதிக்கு இடமில்லாமல் தேங்கச் செய்து விட்டது.

இந்தியாவின் ரிசர்வுகள் முன்பு எதிர்பார்த்ததைவிட அதிகமாகச் சேர்ந்து விட்டன. இந்தியாவுக்கு நாளடைவில் பொறுப்பாட்சி ஏற்பட வேண்டுமானால் பணப்பொறுப்பே மற்ற நிர்வாகப் பொறுப்புக்களை விட முக்கியமானதால் அதில் முன்னதாக மாறுதல் ஏற்பட வேண்டும். இந்த முடிவு அடைய வேண்டி ரிசர்வு பாங்கு மிகவும் அத்தியாவசியம். ஆதலால் இதை ஸ்தாபிக்க முன்னதாக முயற்சி ஏற்படுதல் வேண்டும். மூன்றாவது வட்டமேஜை மகாநாடு இந்த விஷயத்தைச் செவ்வனே ஆராய்ச்சி செய்து முடிவுக்கு வந்து விட்டது. ஷை கான்பரன்ஸால் ஏற்பட்ட நன்மைகளில் இது ஒன்று ஆகும். ரிசர்வு பாங்கின் ஆதிக்கத்தின் கீழ் நாணய செலாவணி நாணயவசதி இவைகள் இரண்டும் ஒருங்கே ஒப்படைக்கப்பட்டு இந்தியாவிலே இருக்கச் செய்ய வேண்டும். இந்தியாவின் நாணய செலாவணி ஆதிபத்தியம் இந்தியாவின், விவசாயிகள், வியாபாரிகள், கைத்தொழிலாளர்கள் இவர்கள் கொண்டுள்ள அபிப்பிராயத்தை அனுசரித்துநடத்தப்படவேண்டும்.

அந்த பாங்கு மத்திய பாங்கிகளின் (Central Banks) அலுவல்களைச் செய்ய வேண்டும். வியாபார விஷயமான பாங்கு முறைகளை (Commercial Banking) அனுசரிக்கக் கூடாது. நாணய நோட்டுகள் வெளியீடு, நாணய செலாவணியை நிர்வகித்தல், ரிசர்வுகளின் மானேஜ்மெண்டைக் கவனித்தல், இந்தியாவிலும் வெளியிலும் கையிருப்பு அலுவல்களையும், இந்திய கவர்ன்மெண்டுக்காக வசூல் உண்டியல் வேலைகளையும், இந்திய பொறுப்புக் கடன் (Public debt) நிர்வாகத்தையும் கவனித்தல் முதலிய காரியங்களைச் செய்ய வேண்டும். அது பாங்குகளுக்குப் பாங்கியாகவும், இந்தியாவில் வேலை செய்யும் மற்ற பாங்கிகளெல்லாம் தங்கள் காலத்தை அனுசரித்ததும், தேவையானபோதும் வாப்சு கொடுக்கவேண்டியதுமான பொறுப்புகளின் (Liabilities ஒரு பகுதி தொகையை போட்டுவைக்கவேண்டுமென்றும் சட்ட மூலம் ஏற்பாடு செய்தலவசியம். நாணயக்குறைவும் நாணய நொடித்தலும் மேல்கண்டபடி பாங்குகளின் ரிசர்வுகள் சேகரிக்கப்பட்டு ஒரு சரியான சென்ட்ரல் பாங்கியில் போடப்பட்டு இருக்குமானால் ஏற்பட நியாயமேயில்லை.

இம்மாதிரி பாங்கியின் ஆதரவின்பேரில்தான் கூட்டு முதல் பாங்கிகள் (Joint Stock Banks) அபிவிருத்தியடைய ஹேதுவாகும். அப்படிப்பட்ட பாங்குகளில் நம்பிக்கை ஏற்படுவதற்கும் அவைகளின் க்ஷேமத்தை எதிர்பார்க்கவும் ஒரு மத்திய பாங்கு முதலாக ஏற்படுத்துதல் அவசியம்.

ஆதலால் தற்சமயம் பிரஸ்தாபத்திலுள்ள ரிசர்வு பாங்கு ஏற்படுத்தும் விஷயம் புதிய அரசியல் திட்டங்கள் அமுலுக்கு வருவதற்கு முன்னதாக முடிவு செய்யப்பட்டு இந்தியாவுக்கு அம்மாதிரி ஏற்படும் பாங்கு தற்சமயம் கவர்ன்மெண்டாரிடம் இருக்கும் பாதுகாப்புத் திரவியங்களான கரென்சி ரிசர்வ் இவைகளைப் பெற்று, மத்திய பாங்கிகள் எங்கும் உள்ளபடி செய்யும் அலுவல்களையே கவனித்தல் வேண்டும். அவையாவன—நாணய நோட்டு செலாவணிக்கு அதிகாரியாகவும் இரண்டாவதாக அது நடுநிலைமையிலிருந்தும், இந்தியாவின் நாணய வசதிகளை (Credit facilities) முறைப்படுத்தல் வேண்டும். கம்மர்ஷியல் பாங்குகள் அநேகமாக உள்ளாகும் ஆபத்துக்களுக்கு இடமில்லாமல் ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். ஆகையால் தற்போதுள்ள இம்பீரியல் பாங்கை இந்த ரிசர்வ் பாங்காக ஏற்படுத்துதல் முடியாது. ஆனால் அது மேல்சொன்ன இரண்டொரு காரியங்களை இப்பொழுதும் நடத்தி வருகிறது. இருந்தாலும் அதனுடைய பெரும்பான்மையான அலுவல்கள் ஒரு ஜாயின்ட் ஸ்டாக் பாங்கினுடையவைகளே. இந்தியாவின் மத்திய பாங்கியின் அலுவல்களை அதனிடம் ஒப்புவிப்பதானால் தன்னுடையதாகவுள்ள அநேக காரியங்களை விட்டு சில வரம்புகளுக்கு மட்டுமே கட்டுப்பட்டதாகவேண்டியிருக்கும்.

ஆதலால் இப்பொழுது சமீபத்தில் ஏற்படும் ரிசர்வு பாங்கு எப்படிப்பட்டது என்பது அறிவது அவசியம். மறுபடி இதுவிஷயமாக சட்டசபைகளில் வாதமேற்படக்கூடும். ஆனால் சமயமும் சந்தர்ப்பங்களும் அதிகமாக மாறி இந்த விஷயகாக நெடுகிலும் யோசனை செய்யப் போதுமான அவகாசம் ஏற்பட்டதினால் ஒரு விதமான ராஜிக்கு வழி ஏற்படும் என்றும் இது விஷயம் ஸ்வாரஸ்யப்பட்டுள்ள இந்திய மக்களின் திருப்திக்கு தகுந்ததாக வேண்டிய மாறுதல்களுடன் அமைக்கப்படும் என்றும் எதிர் பார்க்கப்படுகிறது.

இது விஷயமாக மத்திய பாங்கிங் கமிஷன் யோசித்து இருக்கிறது. ஆனால் அது அவ்வளவு எல்லாராலும் ஒப்புக்கொள்ளத்தக்கதல்ல. வட்டமேஜை மகாநாட்டின் நடவடிக்கைகள் விஷயமாக இந்தியாவில் அது சமயம் பிரசுரிக்கப்பட்ட சில சமாசாரங்களை அனுசரித்து, மத்திய பாங்கிங் கமிஷன் சேர்மன் காரணமன்னியில் சட்டங்கள் ஏற்படுத்துபவர்கள் பேரில் அந்தக் காலத்திய நிலையை அனுசரித்து ஏற்பாடுகள் செய்வார்கள் என்ற எண்ணத்துடன், பொதுவில் அந்த பாங்கு ஏற்படுத்தும் விஷயத்தில் ராஜீய சம்பந்தமும் ஆதிக்கமும் பெரும்பாலும் கவனிக்கப்படவேண்டுமென்றே கடமைகளைச் சுமத்திவிட்டார். ஆதலால் அந்த பாங்கு (1) கவர்ன்மெண்டு ஆதிக்கத்துக்கு உட்பட்ட பாங்காக இருக்கவேண்டுமா அல்லது பங்குகள் கொண்ட முதலாளிகள் பாங்காக இருக்கவேண்டுமா? (2) நிர்வாக மெம்பர்கள் எப்படித் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்ற இந்த இரண்டு விஷயங்களைப் பற்றி பேச இடங்கொடுக்கவில்லை. ஷை கமிஷன் இந்தமாதிரி முக்கியமான எந்த விஷயங்களைப் பற்றி முன்பு ஒரு தடவை தகரார்கள் ஏற்பட்டதோ அது விஷயமாய்ச் செம்மையாக ஆலோசித்து முடிவுக்கு வர இடமில்லாமல்

செய்தவற்கு வருந்துகிறோம். ஆனால் இப்பொழுது மாறுதல்களுடன் ரிசர்வு பாங்கு விஷயம் மறுபடி வருமானால், ஷேர்களால் ஆகிய ரிசர்வு பாங்கு ஏற்படுத்தல் வேண்டுமா? அல்லது சர்க்கார் ஆதிக்கத்துக்கு உட்பட்டதாக இருக்கவேண்டியதா என்ற இந்த இரண்டு விஷயங்களைச் சட்டசபை கவனிக்கவேண்டும். என்னுடைய சொந்த அபிப்பிராயம், இந்தியாவுக்கு மேல்கண்டபடி ஸ்தாபிக்கும் பாங்கி ஷேர்தாரர்கள் அடங்கியதாக இருக்கவேண்டுமென்பதே. ஏனெனில் அதனால்தான் உள்ளடங்க நிர்வாகத்தைக் கவனிப்பதில் பொது ஜனங்களுடைய வாக்குரிமை கொண்டாட வழி ஏற்படும் என்றும் அபிப்பிராயப்படுகிறேன். திட்டங்கள் ஏற்படுத்துவதில், பங்குதாரர்கள் தங்கள் உரிமைகளை, கவர்ன்மெண்டு ஆதிக்கத்தாலாவது சட்டசபையாரின் அதிபலத்தாலாவது, செவ்வனே செலுத்தச் சக்தியின்றி போகாமலும், அதிகமாகப் பொதுமக்களுக்கே உரிமை கொடுப்பதால் அதனால் அநேக இடையூறுகளுக்கு காரணமாக ஏற்படும் விதமாக அவ்வளவு தாராளமாகவாவது இருக்காதபடி கவனித்தல் அவசியம். அந்தப்படி ஏற்பாடு செய்யும்பக்ஷத்தில் ஏன் பங்குதாரர்கள் அடங்கிய பாங்காக இதர தேசங்களிலுள்ளபடி அமைக்கக் கூடாது? நிர்வாக தேர்தலில் பங்குதாரர்களுக்கு சில பாத்தியதைகளையும்,சட்டசபைகளுக்கு கொஞ்சபாத்தியதையுமேஏற்படுத்துதல் அவசியம். ஏனெனில் வேறு தேசங்களில் உள்ளபடி பொதுஜன சமூக வாழ்க்கைக்கு ஏற்பட்டதான ஜனநாயக ஆட்சிமுறை இந்த இந்தியாவைப் பொறுத்தமட்டில் இல்லாமலிருப்பதுதான் அதற்கு காரணம். இந்தியாவின் பணப்பொறுப்பு நிர்வாகம், தற்சமயம் வரம்பு இல்லாத பாத்தியதையுடன்கூடிய இந்திய கவர்னர் ஜனரலின் கையில் இருப்பதனால், மத்திய அல்லது மாகாண சட்டசபைகளில் கொண்டுவரப்படும் எது விஷயமும் அவரது அங்கீகாரம் அடையவேண்டியிருக்கிறது. இந்த நிலைமையில் மத்திய சட்டசபையிலிருந்தும், மாகாண சட்டசபைகளிலிருந்தும் பிரமுகர்களைத் தேர்தல் செய்து, டை பாங்கின் நிர்வாக சபை அமைப்பது சிலாக்கியமாகும். இங்கிலாந்திலுள்ளபடி தீவிரமான இரண்டு விரோத நோக்கங்களையுடைய ராஜீய வாதிகளால் அடிக்கடி சச்சரவிட்டுக்கொண்டு அதனால் மத்திய பாங்கு நிர்வாகத்தில் அவதிப்படுவது போலல்லாமல் இந்தியாவில் கொடுக்கப்படும் நிர்வாக உரிமையில் கொஞ்ச பாகமே இருப்பதால் சமயம் ஏற்படும் பொழுது மட்டும் பொதுஜன அபிப்பிராயத்தை தெரிவித்துக் கொள்ள இடமேற்படுகிறது. ஆதலால் நாம் ராஜீயவாதிகளால் சட்டசபை மெம்பர்களின் பிரதிநிதிகளுக்கு ஒரு சிறிய பாகமும், பங்குதாரர்களின் பிரதிநிதிகளுக்கு பெரும்பான்மையான பாகமும் நிர்வாகத்தில் ஏற்படுத்திக் கொடுத்தல் அவசியம். ஆனால் போர்டாரின் அலுவல்கள் சட்டத்திற்குக் கட்டுப்பட்டதாகவும் சில விஷயங்களில் மட்டும் கவர்னர் ஜனரல் அவர்களின் அனுமதிக்கு உள்ளாயுமி யிருத்தல் வேண்டும். அப்படி இருக்குமாகில் பங்குதாரர்களின் பிரதிநிதிகளும் சட்டசபையின் பிரதிநிதிகளுமாகக்கொண்ட நிர்வாக சபை அதிருப்திகரமான யாதொரு காரியத்தையும் செய்ய இடமேற்படாது. அவர்கள் தேசத்தின் நன்மையையே எப்பொழுதும் தங்கள் மனதில் கொண்டுள்ளவர்களான இந்தியர்களாக யிருப்பார்களாதலால் அவர்கள் செய்யும் ஒவ்வொரு காரியமும் இந்தியாவின் பொது நன்மைக்கும் பாங்கியின் அபிவிருத்திக்கும் உகந்ததாக இருக்கும் என்பதில் ஆக்ஷேபணை யில்லை.

## விபூதி=நாம வைராக்கியம்.



1. விபூதிக்காரருக்கும், நாமக்காரருக்கும் சும்மா வழியில் போகும் போதே எரிச்சல் கிளம்பிவிடுகிறது. 2. ஒரு குறும்புக்காரப் பையன் நாமக்காரரைக் கல்லால் அடித்துவிட்டுத் தபால்பெட்டிப் பக்கம் மறைகிறான். 3. நாமக்காரர் விபூதிக்காரர்மீது சந்தேகங்கொண்டு கல் எடுக்கிறார். 4. விபூதிக்காருக்கு விழுந்தது கல்லடி. 5. கடைசியில் இரண்டுபேர் சமர்த்தையும் கவனியுங்கள்.

# ஓர் நினைவுறுத்தல்

(ந. போ. சுந்தரேசன்.)

ஐம்பூத்தீவாகிய பாரததர்ம மஹாநாட்டில் மானுட வடிவந்தாங்கிய நாம், பல்லாயிரம் ஆண்டுகளாக அனுபவித்து வந்த இராட்டினத்தின் மகிமையை மஹாத்துமா காந்தியடிகள் பிரகாசிக்கச் செய்துள்ளதை நாம் பின் தொடர்ந்து சக்தியை பிரதிபலிக்கச் செய்தால் அச்சக்தியின் வீரம் வீண் போகாதென்பதை அறியாமல் கதரபிமான மில்லாத மடமையால் மதியிழந்து வருகிறோம். வேதநீதியர்களடர்ந்த நம்பாரத தர்ம நாட்டின் வறுமையைப் போக்கக்கூடிய வழி கதரே யாகும்; நமதுநாட்டாரின் முன்னேற்றத்திற்கு பெரிய முக்கிய இடையூறுயுள்ளது கதரணியா திருப்பதே யாகும்.

சீதோஷ்ண நிலைக்கேற்ப ஒவ்வொரு தேயத்தாரின் உடுப்பு, உணவு முதலியன மாறுபட்டிருப்பது சகஜமே! அப்படியிருக்க, நமது நாட்டில் நம்மவர்கள் காற்சட்டை, தொப்பி, கிராப், பூட்ஸ் முதலியன அணிந்துகொண்டு, மேல்நாட்டாரைப்போல நடிப்பதோடு நம்முன்னோர்கள் வழங்கிய உணவுப் பொருள்களைவிட்டு ரொட்டி, குடிவகைகள், இறைச்சியினால் தயார்செய்த திரவ பதார்த்தங்கள், முட்டைகளினால் செய்த மாவுவகைகள் முதலியவைகள் பூராவாய் நம்மவர்களால் பாவிக்கவும் படுகின்றன. ஐயகோ! இவ்வுணவுகள் உஷ்ணதேயங்களாய நம் தேசத்துக்கு ஏற்குமா? நபுஞ்சகத்தன்மை யல்லவா உண்டாகிறது! இதைக் கவனிக்கின்றா ரில்லையே.

நம்பாரத தர்மநாட்டுப் போஜனம் நமது உடம்புக்கு எத்தனையோ நலமானதான மல்லி, சீரகம், மிளகு, மஞ்சள், வெந்தயம், கடுகு, மிளகாய், விதம் விதமான தானியவகைகள், கிழங்குகள், உப்பு முதலியன நந்தமிழ் வயித்திய மருந்துச் சரக்குகளே சாஸ்திரத்தை அநுசரித்தல்லவா அவ்வுணவு வகைகள் சேர்க்கப்படுகின்றன? இவைகளின் குணகுணங்களை நம் ஆயுர்வேதமாகிய வயித்தியத்தில் கூறுவதை நாம் தெரிந்து கொள்ளவும் சக்தி யற்றவர்களானோம். அந்தோ! ஆடவர்கள்தான் இந்நிலைமைக்கு வந்துவிட்டார்களென்றாலும், பெண்பாலர்களும், மேல்நாட்டினர்களைப் போலவும் நடிக்கத் தொடங்கி நடையுடை பாவனைகளும் மாறி, பாவாடை தாவணி சுற்றுடுப்பு முதலியவைகளையும் உடுக்கத் தொடங்கி, இலட்சுமிக் கொப்பான தமிழ் உடுப்புகளையும்

இகழ்ந்து, விதமான விந்நியாச சாயப்புடவைகளை வாங்கிச் சன்னல் பின்னலாய்க் கிழித்து தைத்துடுத்திக்கொண்டு தமிழ்முறையை தாழ்ச்சியாகப் பேசி, ஆங்கிலேயரின் மாதர் போன்றும் நம் கன்னிப்பெண்கள் உபாத்திமை வேலைகளிலும் நர்ஸுகளாகவும் அமர்ந்திருப்பதை இன்றும் கண்டறிகிறோம். இவ்விதமான கொள்கைகளில் முதன்முதற் பிரவர்த்தித்து முற்றிலும் தேறியவர்கள் பிராமணர்களும், அன்னவர்களின் மாதர்களுமே என்பதை குறிப்பிட வேண்டியதாகவு மிருக்கிறது என்பதில் ஐயமில்லை என யான் நினைப்பூட்ட வேண்டுவதில்லை. அந்நியநாட்டு உடைகளைப்போ லணிந்து நடக்கத் தொடங்கியதினாலும், எத்தனையோ குழந்தைகளும் மாதர்களும் நோக்கிரையாளுர்களென்பதைப் பார்த்தும் கேட்டு மிருக்கிறோம். நம்மாதர்களுக்கு குடும்பவேலைகள் போக பாக்கி காலங்களை விருதாகாலமாகப் போக்கி அனர்த்தமான விருதா கோஷ்டிகள் கூடி, வம்புப் பேச்சுகளில் காலத்தை அவமே போக்குவதை நிவர்த்தி செய்து நம்புராதன இராட்டையில் நூல்நூற்கச் செய்வோமாகில் அவர்களின் கற்பும் வீரமும் உன்னதமான நிலைமைக்கு வருவதோடு, நம்நாடும் எவ்வளவோ சீர்திருத்தமு மடையும்; நமது நாட்டுக்கும் மாபெருங் கீர்த்தி என்பதை அவர்களுக்கு போதிக்க நாம் முற்படுவோமாக!

தற்காலம் நாமிருக்கும் நிலைமையோ, பரதேசத்துணி முதலிய சாமான்களில் ஆசை வைத்தோம். ஆயுர்வேத முறைகளைக் கைவிட்டோம், ஜீவகாருண்யம், ஈஸ்வரபக்தி, தயை, சாந்தம், அன்பு, உதவி புரிதல் முதலிய சற்கருமங்களை அடியோடு மறந்தோம். புராதன ஸ்தாவர சொத்துகளைக் குறைந்த விலைக்கு விற்று ஆங்கிலப்படிப்பைக் கற்று நெடுக உதவி புரியாத அற்ப சேவகா விருத்தியில் இறுமாப்படைந்தோம். வேதவிதியாகவுள்ள நால்வகை வர்ணமும் எங்குள்ளா ரென்ற உண்மை அறியாமல் ஜாதி என்ற பேய் பிடித்துத் தலைசுற்றி யாடுகின்றோம். நதியின் பிரவாகம் சமுத்திரம் சார்வதென்ற உண்மை யறியாமல் மதவெறிபிடித்து மயங்கித் திகைக்கிறோம். ஆங்கிலம் கற்று உத்தியோக முள்ளவர்களிடமே சம்பந்தம் செய்வதென்ற பேதமை புத்தியையும் கைக்கொண்டோம். டாம்பீகச் செலவினால் அளவில்லாப் பொருளையுமிழந்து வறுமையில் ஆழ்ந்தோம், புண்ணிய பூமியிற் பிறந்து புண்ணிய மறியாமற் றிகைப்புண்டோம். புராதனநாட்டின் நூலாடையை மறந்தோம். ஆயுர்வேத அபிவிருத்தியையும் கைவிட்டோம். அநுபூதியை முழுதும் உணர்ந்தவர்களை ஏளனஞ் செய்யத் தலைப்பட்டு சட்டை தொப்பி பூட்ஸ் கிருப் இவைகளுக்கு மதிப்புக்கொடுத்தோம். இன்னம் பலவிதமான காரியங்களில் திகைத்து நாம் நாம் மருள் கொண்டிருப்பதை யுணர்ந்த, நமது தேசிய மகாசபையார் தேசநன்மைக்காகப் பொருளுதவிபுரிந்தும், சிறைவாசம் செய்தும் அரும்பாடு படுவதை நேரில் கண்டறிகிறோம்.

கைநூலாடையே அறமெனக் கருதினால், நமது தேசத்து வறுமையும் நீங்கும். அஹிம்ஸையை கைக்கொண்டு சுதந்தரம் பெற எல்லாம் வல்ல இறைவன் அருள் பாலிப்பாராக.




## "பச்சாத்தாபம்"



அயலகத்தார்:—"என்ன வீட்டில் பெரிய கூச்சல்?"

வீட்டுக்காரர்:—"நான் பிந்திப் போனதினுல் ரயில் தவறிவிட்டது. அதற்கு வீட்டிலிருக்கும் மூதேவி பொறியாய்ப் பறக்கிறுள்".

அயலகத்தார்:—"ஆம் நீங்கள் தான் எங்கே போனுலும் பிந்திப் பிந்திப் போகின்றீர்கள். உங்களுடைய கலியாண முகூர்த்தத்திற்குங்கூட இப்படித்தான் பிந்திப் போனீர்களோ?"

வீட்டுக்காரர்:—ஐயோ! அதற்கு இப்படிப் பிந்திப் போயிருந்தேனுகில் எவ்வளவு நன்றுயிருக்கும். இந்தப் பேயைக் கட்டிமாரடித்துக்கொண்டிருக்க அவசியமில்லையே."

***

## "கீழ்ப்படிதல்"

சார்ஜண்ட்:—"அதோ தெரிகிற சிவப்பு விளக்கு வரை உன்னுடைய பீட். ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்" என்று புதிதாய் வேலையிலமர்ந்த போலீஸ்காரனிடம் சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

மறுநாள் காலை புது கான்ஸ்டேபிள் போலீஸ் ஸ்டேஷனுக்கு வரவில்லை. சாயங்காலம் அதிகம் களைத்துத் தள்ளாடி வந்து சேர்ந்தான்.



சார்ஜண்ட்:—"நேற்றிரவு பீட்டுக்குப் போனபின் நீ ஏன் இவ்வளவு நேரம் இங்கு வரவில்லை?"

கான்ஸ்டேபிள்:—"தாங்கள் நேற்றிரவு காட்டிய சிவப்பு விளக்கு மட்டும் போகலாமென்று நடந்தேன். நடந்து போகப்போகக் கடைசியில் செங்கற்பட்டில் போய்ச் சேர்ந்தேன். என்ன என்று கவனித்ததில் அது ஒரு மாட்டு வண்டியின் பின்னுல் தொங்கவிட்டிருந்த சிவப்பு விளக்கு; என்று தெரிந்தது."

"வேலை போகும்"



விருந்துண்டு போகிறவர்:—"அப்பா எனக்கு அவசர ஜோலி இருக்கிறது. ரயிலுக்குத் தவறாமல் கொண்டு சேர்த்து விடு."

டிரைவர்:—"ஐயா! தாங்கள் பயப்பட வேண்டாம். அப்படியே ஆகட்டும். தங்களை ரயில் வண்டியில் ஏற்றி ஒழித்து விடாமல் திரும்ப வீட்டுக்குக் கொண்டு வருவதாயிருந்தால் என்னை உடனே வேலையினின்று நீக்கி விடுவதாக எஜமான் எச்சரித்திருக்கிறார்."

***

நண்பன்:—நான் இந்த வீட்டின் நல்ல மனிதனைப் பார்க்க வந்தேன். இப்பொழுது காணக்கூடுமா?

நண்பன் மனைவி:—இல்லை. இந்த வீட்டில் நல்ல மனிதன் யாரும் இல்லை. என் புருஷன்தான் இருக்கிறார்.

***

"தேடுதல்"



போலீஸ்காரன்:—"நீ கீழே என்ன தேடிக் கொண்டிருக்கிறாய்?"

குடிகாரன்;—"வீட்டிலிருந்து எட்டணா எடுத்துக்கொண்டு வந்தேன் அதைக் காணோம்."

போலீஸ்காரன்:—"நீ அதைக் கள்ளுக்கடையில்தான் போட்டுவிட்டு வந்திருக்கிறாய்."

குடிகாரன்:—"அங்கே இருட்டா யிருந்ததால் இங்கே வந்து தேடிப் பார்த்தேன்."

***

டாக்டரான தந்தை:—ஓகோ! தெர்மா மீட்டர் ரொம்ப விழுந்துவிட்டது............

மகன்:—அப்படியானால் உடைந்திருக்குமே.

***

சிறுமி:—அப்பா, தாங்கள் இறக்கும்பொழுது அடியாளுக்கு விட்டுப் போவதென்ன?

தந்தை:—தந்தை யற்ற சிறுமி.



### "மூளை"

மாதக்கணக்கில் சாப்பிடுகிறவர்:—(கோபாவேசத்துடன்) "மூளை கொஞ்சமேனு மிருந்தால் நீ இந்த உபயோகமற்ற பதார்த்தங்களை எனக்கு வைத்திருக்க மாட்டாய்."

ஹோட்டல்காரன்:—"எதிர்பாராத வண்ணம் மூளை செலவாகிவிட்டது. தங்களுக்கு, மூளை யிருந்தால் இந்தப் பதார்த்தங்களை ஏன் கொண்டு வைக்கிறேன்."

***

தந்தை:—"அடே நீங்கள் இருவரும் சண்டை போடக் கூடாதென்று இராத்திரித் தானே சொன்னேன். மறுபடி ஏன் சச்சரவு செய்கிறீர்கள்."

மகன்:—"ஆம் அப்பா. அந்தக் கழுதை இதை மறந்துவிட்டு மறுபடி சண்டைக்கு வருகிறான். அதனால்தான் அதை ஞாபகப்படுத்தி அடிக்கிறேன்."

***

### "ஆசை தீர்தல்"



மனைவி:—"கண்ணாடிக்குள் தொங்க விட்டிருக்கும் அந்தச் சேலையைப் பார்க்கப் பார்க்க, எனக்கு வீட்டுக்குத் திரும்பவே இஷ்டமில்லை."

கணவன்:—"அதற்கென்ன! இன்றோடா போச்சுது? தினந் தினம் சாயங்காலம் ஒரு முறை வந்து பார்த்துவிட்டுப் போனால் போகிறது."

***

ஞாபக மறதி நண்பர்:—என்ன க்ஷேமமா? தங்கள் மனைவி முதலியோர் சௌக்கியம் தானே?

நண்பர்:—எனக்கு இன்னும் கலியாணம் ஆகவில்லையே!

ஞா. ந:—ஓகோ! தாங்கள் பிரம்மச்சாரியென்று எண்ணிக் கேட்டுவிட்டேன். தங்கள் வியாபாரம் ஒழுங்காக நடக்கிறதா?

நண்பர்:—நான் உத்தியோகமல்லவா பார்க்கிறேன்.

ஞா. ந:—ஆம். ஆம். தாங்கள் முனிசிபல் ஆபீசில் இருப்பதாக நினைத்துக் கேட்டேன். தாங்கள் முதலியார் தானே;

நண்:—செட்டியார் என்பதை மறந்துவிட்டீர்களா?

ஞா. ந:—ஆம், ஆம், ராமசாமி ஐயருடைய பந்துவென்று நினைத்து விட்டேன்.

***

"குற்றம்"

பையன்:—(அழுதுகொண்டு) "அம்மா! சுப்பையா என்னைக் கன்னத்தில் பலமாக அறைந்து விட்டான்."

தாய்:—"ஏண்டா உன்னை அப்படி அடித்தான்?"

பையன்:—"பரீட்சையில் என்னைப் பார்த்து எல்லாக் கணக்குகளையும் காப்பி யடித்ததற்காக."

"தாய்:—உன்னைப் பார்த்துக் காப்பி யடித்தால் உன்னிடம் அவன் இஷ்டமாகவல்லவோ யிருக்கவேண்டும்."

பையன்:—"பரீட்சை முடிந்த பின் பார்த்ததில் நான் போட்டிருந்த கணக்குகள் எல்லாம் தப்பாக இருந்தன."

***

"நம்பிக்கை"

வந்திருப்பவர்:—"முதலாளி உள்ளே யில்லை யென்பது நிச்சயந்தானா?"

வேலைக்காரன்:—"நீங்கள் அவருடைய வார்த்தையைக் கூட நம்ப மாட்டீர்களா!"

***

முதலாளி:—வசூலுக்குப் போனாயே. அவன் என்ன ஞாயம் சொன்னான்?

ஆள்:—ஞாயம் என் வசம் இருக்கிறது. அவன் என்னை அடிக்க வந்தான்—இது ஞாயமா?



***

ஓடிக்கொண்டிருந்த கார் திடீரென வழியில் நின்றுவிட்டது. போலீஸ்காரன் வந்ததும் "ஏ! நடுவழியில் காரை நிறுத்திக்கொண்டு வழி மறிக்கிறாய். ஓட்டு ஸ்டேஷனுக்கு".

ஞாபக மறதியான வண்டி ஓட்டி:—(காரை சரிபார்த்துக்கொண்டே) "ஐயா கொஞ்சம் இந்தக் கம்பியைத் தூக்கிப் பிடித்துக்கொள்ளும். அயோக்கியப் போலீஸ்காரன் வருவதற்குள் போய்விடவேண்டும்."




இத்தாலியைச் சேர்ந்த மெஸ்ஸினாவில் செம்படவன் பிடித்த மீன் ஒன்று இரண்டு டன் நிறையுள்ளதாக இருந்ததாம். அதன் வயிற்றில் இரண்டு "அந்தர் வெய்ட்"டுள்ள மீனொன்று காணப்பட்டதாம்.

*　　　*　　　*

சித்தூரைச் சேர்ந்த புங்கனூரில் சுமார் 70 வயதுள்ள லக்ஷ்மி அம்மாள் என்பவருக்குத் தலையில் 5 அங்குல நீளமுள்ள இரண்டு கொம்புகள் இருக்கின்றனவாம். சென்ற பத்தாண்டுகளாக அவை இருக்கின்றனவாம்.

*　　　*　　　*

எகிப்தில் ஒரு நத்தை இறந்துகிடப்பதாக எண்ணிக் கண்டுபிடித்தார்களாம். அது பிரிட்டிஷ் மியூசியத்தில் ஒரு மேஜைமீது நான்காண்டுகளாக வைக்கப்பட்டிருந்தது. அது இப்பொழுது உயிர் பெற்றுவிட்டதாம்.

*　　　*　　　*

ஜுகோஸ்லேவியாவில் 30 வயதுக்கு மேற்பட்ட பிரமசாரிகளுக்கு வரி விதிக்கப்பட்டிருக்கிறதாம்.

*　　　*　　　*

ஒரு மனிதன் கண்ணை இடுக்கிப்பார்க்கும்போது முகத்திலுள்ள 50-வெவ்வேறு தசைப்பகுதிகள் சுருங்குகின்றனவாம்.

*　　　*　　　*

டண்டி என்ற விடத்தில் பிறந்த ஒரு கைக்குழந்தைக்கு 32-பற்கள் இருக்கின்றனவாம்.

*　　　*　　　*

சில புழுக்களுக்குக் கால்களில் காதுகள் இருக்கின்றனவாம்.

*　　　*　　　*

எறும்பு தன்னைவிட 3000 மடங்கு அதிகப் பளுவை எடுத்துச் செல்லுமாம்.

*　　　*　　　*

பூமியின் மொத்தப் பரப்பில் சைபீரியாவின் பரப்பு ஒன்பதில் ஒரு பங்காம்.

*　　　*　　　*

உருக்குக் கம்பிகளை வெகு லேசாக இழுத்துப் பட்டுத் துணிகளைப் போன்ற வஸ்திரங்களை நெய்யலாமாம்.

*　　　*　　　*

பிரிட்டிஷ் மியூஸியம் வாசகசாலையில் தினந்தோறும் 100 புதிய புஸ்தகங்கள் சேகரித்து வைக்கப்படுகின்றனவாம்.

*　　　*

150 வருஷங்களுக்கு முன் கேப்டன் குக் என்பவர் வளர்த்துவந்த ஆமை இன்னும் உயிரோடிருக்கிறதாம்.




**செயற்கை நிற மரங்கள்:—**

கரோலின் தெற்குப் பிரதேசத்தில் மரங்களுக்குச் சாயம் ஏற்றும் முறையைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். சிவப்பு, நீலம், பச்சை, ஊதா முதலிய சாயங்களை—வளரும்போதே மரத்துடன் சேர்த்துவிடுகிறார்கள். மரங்கள் வளர்ந்தவுடன் வேண்டிய நிறங்களுக்கு அவைகளை வெட்டித் துண்டு துண்டாக்கி எடுத்துக்கொள்ளுகிறார்கள்.

***

**செய்தி தெரிவிக்கும் யந்திரம்:—**

இப்பொழுது செய்தி தெரிவிக்கும் புதிய யந்திரம் ஒன்று கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. ரயில்வே ஸ்டேஷன்களிலும், ஓட்டல்களிலும் தங்கள் நண்பர்களுக்காகக் காத்திருக்க முடியாதவர்கள்—அங்குள்ள ஒரு யந்திரத்தில் குறிப்பிட்ட ஒரு நாணயத்தைப் போட்டால்—அதனுள்ளிருந்து கண்ணாடிக் குழா யொன்று வரும். அதில் நண்பர்களுக்குச் சொல்லவேண்டிய செய்தியை எழுதி வைத்துவிடலாம். நண்பர்கள் அங்கு வந்து, அந்த யந்திரத்தினிடம் சென்று செய்தியை வாசித்து அறிந்துகொள்ளலாமாம்.

***

**ஐந்து நிமிஷத்தில் கலியாண ரத்து:—**

ஜப்பான் தேசத்தில் நாபா என்ற இடத்தில் ஒருவன் தவறாகத் தான் குறியாத மற்றொரு பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டதால் தாலிகட்டிய ஐந்து நிமிஷ நேரத்தில் கலியாண ரத்து நடந்தது. ஜப்பானியர் வழக்கப்படி தாலி கட்டி ஷர்பத் அருந்திய பின்னர், புருஷன் மணப் பெண்ணின் முக்காட்டை நீக்கியபொழுது பெண் வேறொருத்தி என்று தெரியவந்தது.

***

**பெரிய திறவுகோல்:—**

இங்கிலாந்து பாங்கியில் இரண்டு பெரிய இரும்புக் கதவுகள் இருக்கின்றன. ஒவ்வொரு கதவும் இரண்டு டன் நிறை. அக்கதவுகளுக்குரிய பெரிய சாவியை இரண்டு பலசாலிகள் கஷ்டத்தோடு தூக்கிப் போட்டுத் திருகியே திறக்கவேண்டுமாம்.

***

**ராக்ஷஸ தர்மாமீடர்:—**

தர்மாமீடர் என்பது உஷ்ணத்தை அளந்து அறிவிக்கக்கூடிய உஷ்ணமானி. ஜெர்மனியில் மீனிச் என்ற இடத்திலுள்ள கண்காட்சி சாலையில் ஒரு பெரிய தர்மாமீடர் வைத்திருக்கிறார்கள். அதன் நீளம் 71½ அடி. அகலம் 6¼ அடி. இரவிலும் வெளிச்சம் போடப்படுகிறபடியால் தூரத்திலிருந்து கொண்டே யாரும் உஷ்ண நிலையை அறிந்துகொள்ளலாம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்.

## காந்தியடிகளின் விரத வெற்றி

மகாத்மா காந்தியடிகள் தள்ளாத வயதில் மேற்கொண்ட 21 நாள் உண்ணுவிரதம் வெற்றியுடன் முடிவுற்றது. இப்பொழுது காந்தியடிகள் நாளுக்கு நாள் உடல் வலிமைபெற்று வருகிறார். காந்தியடிகள் சட்டமறுப்பை நிறுத்திவிட்டு அரசியல் கைதிகள் எல்லாரையும் விடுதலை செய்துவிடுமாறு அரசாங்கத்தாரை வேண்டினர். ஆனல் அரசாங்கத்தார் அதை மறுத்துவிட்டது பெரிதும் வருந்தத்தக்கது. புதிய அரசியல் அமலுக்கு வரவிருக்கும் இந்நெருக்கடியான நிலையில் அரசியல் கைதிகளைச் சிறைகளில் அடைத்துவைத்துக்கொண்டிருப்பது அறிவுடைய செயலாகாது. பழுத்த மிதவாதிகளுங்கூட சர்க்கார் போக்கை அழுத்தமாகக் கண்டித்துக்கொண்டிருக்கின்றனர். காந்தியடிகள் முழுநலம் பெற்றுத் தக்க வழிகாட்டுவார் என்றே எதிர்பார்க்கின்றோம். காந்தியடிகள் வாழ்க!

***

## பெரம்பூர் ரயில்வே தோழர் மகாநாடு

எம். எஸ். எம். ரயில்வே பெரம்பூர் தொழிலாளர் சங்கத்தின் 5-வது ஆண்டு மகாநாடு தோழர் சிவசுப்பிரமணிய பிள்ளை அவர்கள் தலைமையில் சென்ற மாதம் நடைபெற்றது. திரு. வி. கலியாணசுந்தர முதலியார் கொடியேற்றுவிழா நிகழ்த்தினர். மகாநாட்டில் கலந்துகொண்ட தலைவர்கள் தொழிலாளர்களின் குறைகளையும் அவற்றைத் தீர்க்கும் வழிகளையும் விரிவாகக் குறிப்பிட்டார்கள். பெரம்பூர் தொழிலாளர் சங்கம் தொடங்கிய வேலைநிறுத்தம் எதிர்பார்த்த பயனை அளிக்கவில்லை. அதற்கு அநுதாபங்காட்டிய ஹூப்ளி தொழிலாளரிற் பலரும் வேலை இழந்தனர். முதலாளிகள் தொழிலாளிகளை ஒடுக்க வேலையைவிட்டு நீக்கிவிடுவதை ஒரு பலமான ஆயுதமாகவே எங்கும் கையாண்டு வருகின்றனர். தொழிலாளர்களின் ஒற்றுமையும், கட்டுப்பாடுந்தான் முதலாளிகட்குச் சரியான பாடம் கற்பிக்கவேண்டும். இம்மகாநாட்டில் கலந்துகொண்ட எல்லாத் தலைவர்களும் ஒற்றுமையையும் கட்டுப்பாட்டையும் பரஸ்பர உதவியையும் வற்புறுத்தியது பெரிதும் குறிப்பிடத்தக்கதாகும். ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு என்பதைத் தோழர்கள் உறுதியாகக் கடைப்பிடிக்கவேண்டும். சாதி சமய வேற்றுமைகளை அடியோடு நீக்கித் தொழிலாளர்கள் தோழமை பூண்டு வாழ்ந்தால் எடுத்த காரியம் யாவிலும் வெற்றி என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை.

***

## போலிச் சாமியார்கட்குத் தடை

நமது நாட்டில் உலவும் திண்ணைத் தூங்கிச் சாமியார்களின் கூட்டத்தைப் போல் வேறு எந்நாட்டிலும் இருக்காது என்றே கருதுகின்றோம். சிறப்பாகக் கோவில் குளங்கள் உள்ள விசேஷ ஸ்தலங்கள் என்ற இடங்களிலும் பொதுவாக எல்லா ஊர்களிலும் சாமியார்-சந்நியாச வேஷம் போட்ட பிச்சைக்காரர்களை சகஜமாக காணலாம். ஆண் பெண் குழந்தைகள் அடங்கலும் காஷாயந் தரித்த குடும்பச் சந்நியாசக் கூட்டங்களையும் விசேஷ ஸ்தலங்களில் காணலாம்.

இவர்களுடைய நோக்கம் என்ன? வயிற்றுப் பிழைப்பு என்பதை நாம் விரிக்கவும் வேண்டுமோ? வேஷதாரிகளான போலிச் சாமியார்களின் பெருக்கத்தை ஒழிக்கப் பரோடா சமஸ்தான சட்ட சபையில் ஒரு மசோதா வந்திருக்கிறது என்று அறிந்து மகிழ்ச்சிப் பெருக்கடைகின்றோம். இம்மசோதாவின் நோக்கம் சந்நியாசம் கொள்ள விரும்புகின்றவர்கள் எல்லோரையும் தடை செய்வதல்ல. அரசாங்கத்தின் அநுமதி பெற்றுச் சந்நியாசம் வாங்கச் செய்வதே அதன் நோக்கமாகும். இதனால் போலிச் சாமியார்களின் கூட்டமும் தொல்லையும் ஓரளவு குறையும் என்பதில் ஐயமில்லை. இம்மசோதாவை அங்குள்ள ஜைனர்களில் சிலர் எதிர்த்து வருகிறார்களாம். போலிச் சந்நியாசிகளும் சோம்பேறிகளும் பெருத்த சென்னை மகாணத்திற்கும் இத்தகைய மசோதா இன்றியமையாததாகும்.

***

## அலகு குத்தலுக்குத் தடை

நமது ஹிந்து தர்மத்திற்கும் சம்பிரதாயங்கட்கும் ஒவ்வாத சில காட்டுமிராண்டிச் செயல்கள் இன்னும் ஹிந்து சமயத்தின் பேரால் நடைபெற்றுக் கொண்டிருப்பது மானக்கேடான காரியமாகும். மாரியம்மன் காளியம்மன் போன்ற சிறு தேவதைகளின் பேரால் பலர் குரூரமான செயல்களைச் செய்யத் துணிந்து விடுகின்றனர். அந்த தேவதைகளின் திருவிழாக் காலங்களில் நெருப்பு மிதித்தல், நெருப்புச் சட்டிகளை எடுத்துக் கொண்டு ஆடல், உடம்புகளில் ஊசிகளைக் குத்திக் கொள்ளல், பெரிய பெரிய இரும்புக் கொக்கிகளை குத்தி மோட்டார்கள், சிறு ரதங்கள், உரல்கள் முதலியவற்றை இழுத்தல் போன்ற காரியங்கள் தமிழ் நாட்டில் சர்வ சாதாரணமாய் நடைபெற்றுக்கொண் டிருக்கின்றன. சின்னாட்களுக்கு முன் நாகபட்டினம் மாஜிஸ்ட்ரேட் இந்தக் கொடுந் துன்பமான காரியங்களைச் செய்யக் கூடாது என்று 144-தடையுத்தரவு பிறப்பித்திருந்தார். சென்ற மாதம் தாராபுரம் சூப்பிரண்டும் அத்தகைய தடை செய்திருப்பதை அறிந்து மகிழ்ச்சி அடைகின்றோம். இத்தைகய அநாகரிகச் செய்கைகளை அரசாங்க சட்டங்களின் மூலமே நீக்க வேண்டும் என்று நாம் கருதுகின்றோம். இவ் வுண்மையை நமது சட்ட சபை அங்கத்தினர்கள் கவனித்துச் சட்ட மியற்றும் ஏற்பாடு செய்ய முன் வருவார்களாக.

***

## கிராம முன்னேற்ற போதனை வகுப்பு

ஒரு நாட்டின் முன்னேற்றம் என்பது அந்நாட்டைச் சேர்ந்த கிராமங்களின் அபிவிருத்தியையே சார்ந்து நிற்கிறது. தற்காலம் நம் கிராமங்களின் நிலை மிகவும் பரிதாபகரமானதாகும். புதிய விவசாய முறைகளோ கைத்தொழில் முறைகளோ கிராமாந்திர மக்கட்கு ஒன்றும் தெரியாது. கிராமங்களில் கல்வி இல்லை. சுகாதாரம் இல்லை. செல்வமும் இல்லை. ஆனால் கக்ஷிப் பிரதி கக்ஷிச் சண்டைகட்கும் கோர்ட்டு வழக்குகட்கும் மட்டும் ஒரு குறைவும் இல்லை. இக்காலத்தில் கிராம புனருத்தாரண வேலையில் ஒரு சிலர் ஈடுபட்டு வருவது மகிழ்ச்சிக்குரிய விஷயமே யாகும். சென்றமாதம் தஞ்சாவூரில் ஹார்ட் கூட்டுறவு பாடசாலையின் ஆதரவில் ஒரு கிராம அபிவிருத்தி போதனை வகுப்பு ஏற்பாடு செய்திருக்கும் செய்தியை அறிந்து மகிழ்ச்சிப் பெருக் கடை

கின்றோம். இந்த விழாவுக்குத் தாலுகா போர்டு தலைவர் கான் சாஹிப் டாக்டர் தாஜுடீன், எம். எல். சி. தலைமை வகித்தார். தற்சாலம் இவ் வகுப்பில் பெரும்பாலும் போர்டு உபாத்தியாயர்களாக 86 பேர் சேர்ந்திருக்கிறார்களாம். இதில் முக்கியமாக மூன்று வாரங்களுக்குக் கூட்டுறவு, விவசாயம், கிராம சுகாதாரம், கிராம ஆரம்ப கல்வி, மற்றும் பொது அறிவு முதலிய விஷயங்களைப்பற்றித் தக்க பயிற்சி யுள்ளவர்களால் சொற்பொழிவுகள் நிகழ்த்தப் படுமாம். இது பயன் தரத் தக்க நல்ல ஏற்பாடு என்பதே நமது அபிப்பிராயம். கிராம முன்னேற்றத் தொண்டுக்கு ஆரம்ப ஆசிரியர்களே பெரிதும் தகுதி வாய்ந்தவர்கள் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. ஒவ்வொரு ஜில்லாவிலும் இத்தகைய கிராம முன்னேற்ற போதனை வகுப்புக்கள் ஏற்படவேண்டும் என்று பெரிதும் ஆசைப்படுகின்றோம்.

***

## உலக அமைதிக்கு வழி

உலகத்தில் ஏற்பட்டுள்ள பொருளாதார நெருக்கடி எத்தகைய விபரீதத்தில் வந்து முடியும் என்று ஒன்றும் தோன்றவில்லை. மேனாடுகளிலும் கீழ் நாடுகளிலும் பெரிய போருக்குரிய அறிகுறிகள் கிளம்பிக்கொண்டிருக்கின்றன. ஆயுதப் பரிகாரணம் என்னும் போர்க்கருவி யொழிப்பு மகாநாடுகள் கூடிக் கூடி உருப்படாமல் கலைந்து கொண்டிருக்கின்றன. போர்க்கருவி யொழிப்பு என்பது இதுவரை ஒருவரை யொருவர் சமயம் நேரும்போது அடித்துத் தின்னுவதற்குச் செய்யும் சூழ்ச்சியாகவே எண்ண இடந்தந்து வந்திருக்கிறது. போர்க் கருவிகளை நீ குறைத்துக்கொள்—நீ குறைத்துக்கொள் என்று வாயுள்ள வல்லரசுகள் இளைத்தவர்களைப் பார்த்துச் சொல்லுகிறார்களே யொழியத் தாங்கள் குறைத்துக்கொள்ளுவதற்குத் தயாராக இல்லை என்பதை நடைமுறையில் காட்டிக்கொண்டே வருகிறார்கள். ஐரோப்பாவில் ஒரு சில வல்லரசுகளுக்கு ஜெர்மனியை அடக்கிவிடவேண்டும் என்பது அந்தரங்கத்தில ஆசை. ஆனால் ஹிட்லரின் ஆர்ப்பாட்டம் மற்றவர்களின் ஆர்ப்பாட்டங்கட்கு எந்த விதத்திலும் தாழ்ந்ததில்லை. உலகத்தில் அமைதியை நிலை நிறுத்தப்போவதாக அமெரிக்க பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட் இப்பொழுது கிளம்பியிருக்கிறார். போர்க்கருவி யொழிப்பு மகாநாடு மூலமாகவும், லண்டனில் கூடப்போகும் பொருளாதார மகாநாடு மூலமாகவும் உலக அமைதி ஏற்படுத்திவிடலாம் என்று அவர் எண்ணுகிறார். இவர் போர்களை ஒழிக்க வேண்டும், அதற்காக ஆயுதங்களைக் குறைக்க வேண்டும் என்று 44-தேசங்களுக்கு ஒரு அறிக்கை விடுத்திருக்கிறார். அதில் ரூஸ்வெல்ட் குறிப்பிட்ட விஷயங்கள் மூன்று 1 பிரிட்டிஷார் திட்டப்படி போர்க் கருவி யொழிப்பு மகாநாடு நடைபெற வேண்டும். 2-போர்க்கருவி யொழிப்பு முறைகளையும் காலத்தையும் பற்றித் தேசங்களுக்குள் ஒரு ஒப்பந்தம் ஏற்பட வேண்டும். 3-இரண்டாவது விஷயம் முடியும் வரை தற்காலம் உள்ள ஒப்பந்தங்களை மீறிப் போர்க்கருவிகளை அதிகரிப்பதில்லை என்று சம்பந்தப்பட்ட தேசங்கள் ஒப்புக்கொள்ள வேண்டும். இந்த மூன்றுக்கும் அடிப்படையாக விளங்குவது ரிட்டிஷார் திட்டம். நாடு பிடிக்கும் பேராசையும் எதேச்சாதிகார வெறியும் வல்லரசுகளின் உள்ளங்களினின்றும் நீங்கினலொழிய உலகில் அமைதிநிலவல் அருமை என்பதை நாம் விரிக்கவும் வேண்டுமோ?



# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்.)

(879-ம் பக்கத் தொடர்ச்சி.)

அவள்:—ஏன்! தடங்குகிருய் நான் நன்ருகத்தான் கவனிக்கின்றேனே. மேலே சொல் என்று கேட்டாள்.

சபாபதி முதலியார்:—'இரண்டாவது, முன்னே செய்தமாதிரியாகவே ஒரு சிறிய உபகாரம் செய்யவேண்டும். அது செய்தால், பலன் யாதெனின் (ஜெயமடையும் வண்ணம் ஊக்கத்துடன் நடத்தினுல்) நாமிருவரும் இனி மேல் நம் மாயுள் பரியந்தம் சாரதாவின் பொருமைக்கு சிக்காமல் அவளிடம் அகப்பட்டுக்கொண்டு அவஸ்தைப்பட வேண்டிய தவசியமேயில்லை' என்ருன்.

அவள்:—"என்னமோவென்று நினைத்தேன். இதுதானே, எனக்குத் தெரியுமே. இன்னுமொரு சதியாலோசனைதான். ஐயோ! தெய்வமே! இதற்கு அந்தமில்லையா?—சரி! சொல்லு. என்ன—இன்னுமொரு சூழ்ச்சியோ அல்லது என்னமோ—இருக்கட்டும்—விளங்கும்படி தெரிவி. பார்க்கலாம்" என்று ஒருவித வெறுப்புடன் விருப்பமுற்றவள் போல் கேட்டாள்.

சபாபதி முதலியார்:—"நீ வேறு எதையோ எண்ணி ஏக்கமுறுகிருய். உனக்குப் புரியவில்லை. ஒன்று மப்படிப்பட்ட சதியாலோசனைக ளொன்று மில்லை. ஒரு அற்பமான காரியந்தான். இதனுல் சாரதாவை எளிதில் வென்று ஏமாற்றிவிடலாம்' என்ருன்.

அவள்:—ஏமாற்றிவிடலாமா! யாரை—சாரதாவையா? கடவுளைக்கூட ஏமாற்றிவிடலாம். அவளை ஏமாற்றுவது முடியாத காரியம். பிரயாசையே யன்றி பிரயோசனமிருக்கு மென்பதாக நான் கனவிலும் நினையேன். பேய் பிசாசுகள்கூட அவளிடம் அணுக அஞ்சுமே. கேவலம் நம்மால் முடியுமா?—என்று சொன்னுள்.

சபாபதி முதலியார்:—ஒரு விஷயத்தில் சாரதாவைத் தோற்கடிக்க நம்மால் முடியும்.

அவள்:—அது என்ன? எப்படி யவளைத் தோற்கடிக்க முடியும்?

சபாபதி முதலியார்:—"அது என்னுடைய இரகசியம். மிக்க சாமர்த்திய சாலியாகிய அவளைக்கூட நம்மால் தோற்கடிக்க முடியுமென்று நீ நிச்சயமாய் நம்பலாம்" என்ருன்.

அப்பால் சிறிது நேரத்திற்கு அவர்கள் மௌனமாயிருந்தார்கள். பின்பு என் இனிய மெல்லிடையாள் சபாபதி முதலியாரைப் பார்த்து "நல்லது; நீ சொல்வது உண்மையாகவே வைத்துக்கொண்டு பேசுகிறேன். நீ என்னுடைய நன்மையையே எப்பொழுதும் கோரிக்கொண்டிருப்பதாகச் சொல்லுகிறாய். அப்படியானால் நீ எவ்விதத்திலும் என்னைக் காப்பாற்ற முயலுவாய் என்று நான் நம்பலாமல்லவா?" என்றாள். இதைக் கேட்டதும்,

சபாபதி முதலியார்:—"ஆனால் நீ எனக்கு உதவிபுரிய வேண்டும்" என்றான்.

அவள்:—அது முடியாது. ஒரு காலும் உனக்கு நான் ஒத்தாசை செய்யத் தயாராயிருக்கமாட்டேன். என்னுடைய உதவியின்றியே உன்னுடைய கொடிய வேலைகளை நீ செய்யலாமல்லவா?

சபாபதி முதலியார்:—இப்பொழுது நாம் சாரதாவைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறோம் என்பதை மறந்தனையோ? நீ என்னிடம் நயமாகப் பேசவேண்டியிருக்க வேறு ஏதேதோ வார்த்தைகள் சொல்லுகிறாயா? என்னை விரோதித்துக் கொள்வதனால் உனக்கு யாதொரு நன்மையும் ஏற்படப்போவதில்லை. நீ இங்கிருப்பது சாரதாவுக்கு இன்னமும் தெரியாதென்று நான் நினைக்கிறேன். இல்லாவிட்டால் இந்நேரம் உனக்கு எத்தனையோ ஆபத்தான சம்பவங்கள் நேரிட்டிருக்கும்.

அவள்:—அவள் என்னைக் கண்டு பிடிப்பதற்கு முன் நானே என்னுயிரை மாய்த்துக்கொண்டு விடுவேன்—என்று தீர்மானமான குரலில் மொழிந்தாள்.

சபாபதி முதலியார்:—தற்கொலை செய்து கொள்வது சாத்தியமான காரியமல்ல, சாமானிய விஷயமுமல்ல. அதிலும் உன்னைப் போன்ற பெண்பால் பிராணத் தியாகம் செய்து கொள்வதென்றால் அதற்கு அதிக நேரம் பிடிக்கும். முதலில் மிகவும் திடமாய்த்தான் தீர்மானித்துக் கொள்ளுவார்கள். ஆனால் தற்கொலை செய்து கொள்ளும் அந்த நிமிஷத்தில் அவர்கள் மனம் கலைந்து இளகிப்போய்விடும்.

அவள்:—என் விஷயத்தில் நீ அப்படி நினைக்கவே வேண்டாம்.

சபாபதி முதலியார்:—என்ன? ஏதோ பயித்தியம் பிடித்தாற்போல் பேசிக்கொண்டே போகிறாயே? விஷயத்தைச் சொன்னால் கேட்கமாட்டேனென்கிறாயே?

அவள்:—உன்னுடைய சூழ்ச்சிகளுக்கு உதவி புரிய நான் ஒருகாலும் உடன்பட மாட்டேன். தற்சமயம் நீ என்ன யோசித்துக்கொண்டிருக்கிறாயென்று எனக்கு நன்றாய்த் தெரிகிறது. சாரதாவைக் கொலைசெய்து விடவேண்டுமென்றே நீ யோசித்துக்கொண்டிருக்கிறாய்! அல்லவா?—என்றாள்.

இதைக் கேட்டதும் சபாபதி முதலியார் புன்னகை புரிந்த வண்ணம் "அல்ல, அல்ல. நீ தவறுதலாக எண்ணிக்கொண்டிருக்கிறாய்" என்றான்.

அவள்:—இதற்கு முன்னால் ஒரு முறைதான் உன்னுடைய எண்ணத்தை நான் தவறுதலாக எண்ணிக்கொண்டதுண்டு—என்று சொல்ல,

சபாபதி முதலியார்:—ஆனால் இப்பொழுது நடக்கவேண்டிய விஷயத்தில் நாமிரண்டுபேரும் கலந்திருக்கிறோமென்பதை நீ யோசிக்காமல் பேசுகி

ருய். நீயும் சம்பந்தப்பட்டிருக்கிற படியால் இவ்விஷயத்தில் நீ கட்டாயமாய் உதவி செய்ய வேண்டும்.

அவள்:—நான் கட்டாயமாய் உதவி செய்யமாட்டேன்.

சபாபதி முதலியார்:—நீ செய்யத்தான் வேண்டும். அவளை யடக்கி விடுவதனால் நமக்கு சகல நன்மையு முண்டு.

அவள்:—நல்லது; நீயே இதற்கு முயற்சி செய். நான் கண்டிப்பாய் உதவி செய்ய மாட்டேன்—என்று தீர்மானமாய்ச் சொல்ல,

சபாபதி முதலியார்:—சரி, நீ நயத்தில் வழிப்படமாட்டாய் போலிருக்கிறது. இனி உன்னை வற்புறுத்தினால் தான் காரியம் முடியுமென்று எண்ணுகிறேன்.

அவள்:—உன்னுடைய வற்புறுத்தலுக்கும் கட்டாயத்திற்கும் நான் பயப்படவில்லை, இதற்கு முன்னால் உன்னைப்பற்றி நான் பட்ட கஷ்டங்கள் போதாதா! நல்ல குணமுடையவளென்று பெயரெடுத்துங் கூட, என்னுடைய தலைவிதி, எங்கே இரகசியம் வெளியாகி விடுமோ என்று எப்பொழுதும் அச்சத்துடனேயே யிருந்தேன். இந்த உயிர் பாரத்தைத் தாங்குவதை விட மாய்த்துக் கொள்வதுதான் நலம்.

சபாபதி முதலியார்:—நீ பேசுவது எனக்கு வேடிக்கையாகவே யிருக்கிறது! நாமிப்படி சண்டை போட்டுக் கொள்வதனால் ஏற்படப்போகும நன்மை யாது? நாமிருவரும் சேர்ந்து ஏன் சாரதாவை எதிர்க்கக் கூடாது?

அவள்:—இதற்குத்தான் நான் இசைய மாட்டேனென்று முன்னமேயே கூறிவிட்டேனே?

சபாபதி முதலியார்:—ஆனால் நம்முடைய நிலைமை—ஏன், என்னை விட உன்னுடைய நிலைமையே மிக ஆபத்தா யிருக்கிறதே! அவள் உன்னைக் கண்டு பிடித்து விட்டால்?.....................

அவள்:—இருக்கட்டும்; கண்டு பிடித்து விட்டாலென்ன?

சபாபதி முதலியார்:—அவள் உன்னைக்கண்டு பிடித்து விடும் பட்சத்தில் அவள் மனசு வைத்தால்தான் நீ உயிருடனிருக்க முடியும். அவளுடைய குணந் தான் உனக்குத் தெரியுமே?—என்று சொல்ல "ஆ! நான் என்ன செய்வேன்!" என்று தாங்க முடியாத மனக் கஷ்டத்துடன் மெலிந்த குரலில் சொன்னான்.

சபாபதி முதலியார்:—நீ கிஞ்சித்துக் கூட அதைரியப்பட வேண்டியதில்லை. நாமிருவரும் சேர்ந்தால் அவள் ஒன்றுஞ் செய்ய முடியாது—என,

அவள்:—உண்மையைச் சொல். அவளிடத்தில் உனக்கும் பயந்தானே? என்று கேட்டாள்.

சபாபதி முதலியார்:—ஆம். அவளொருவளுக்குத் தான் நான் பயப்படுகிறேன். நம்முடைய இரகசியம் நம்மைத் தவிர அவளொருவளுக்குத்தான் தெரியும்.

அவள்:—இதற்காக அவளைத் தொலைத்து விட வேண்டுமென்றே நீ எண்ணுகிறாய். அல்லவா?...............உண்மையைச்சொல், அவளைக் கொலை

செய்துவிட வேண்டுமென்று தானே நீ தீர்மானித் திருக்கிறாய்?—என்று கேட்டான்.

சபாபதி முதலியார் கொஞ்ச நேரம் மௌனமா யிருந்து விட்டுப் பிறகு "நல்லது; நீ சந்தேகித்தது உண்மையாகவே யிருக்கட்டுமே" என்றான். இதைக் கேட்டதும் அப் பெண்ணரசி "அப்படியாயின் இந்த வஞ்சகத்தில் நானும் கலந்துகொள்ள மாட்டேன்" என்று பதில் கூறினாள்.

சபாபதி முதலியார்:—இப்படியே நீ பொது காப்பு இல்லாமலிருப்பது ஆபத்து அல்லவா?

அவள்:—எனக்கு என்ன ஆபத்து நேரிட்டாலும் நேரிடட்டும். இனி என் மனம் உறுதிகொண்டு விட்டது. உன்னுடைய யோசனைகளுக்கு நான் ஒரு நாளும் இணங்க மாட்டேன். இந் நிமிஷ முதல் நான் வேறு மனுஷியாக மாறிவிட்டே னென்பது உனக்கு நன்றாக ஞாபக மிருக்கட்டும். நீ ஒரு முறை என்னை ஏமாற்றி விட்டாய். இன்னொருமுறை நீ என்னை ஏமாற்றும் விதமாக நான் நடந்து கொள்ள மாட்டேன்—என்றாள். இதைக்கேட்டதும் சபாபதி முதலியார் சிரித்துக்கொண்டே "ஓஹோ! இவ்வளவு சுலபமாக என்னைவிட்டு நீங்கி விடலாமென்று நீ எண்ணிக் கொண்டிருக்கிறாயோ?... வேண்டாம்! வேண்டாம்! நான் சொல்வதைக்கேள். நீ ஏதோ அசட்டுத்தன மாகப் பேசுகிறாய். பின்னால் நீ வருத்தப்படும்படியான காலம் வருமென் பதைக் கவனி" என்று கூறினான்.

உடனே அம்மாதரசி அவனைப்பார்த்து "உன்னுடன் சம்பந்தப்பட் டேனே யென்னும் இவ்வொரே வருத்தந்தான் என்னை எந்நேரமும் வாட்டு கின்றது. இஃதல்லாது உன் பேச்சைக் கேட்காமலிருந்து விட்டேனே யென்று நான் ஒரு பொழுதும் சிந்திக்கமாட்டேன்" என்று சொல்ல இதற்கு அவன் "சரி, நாளடைவில் பார்க்கலாம்" என்று இயம்ப இவனுடைய தொல்லை தாங்கமாட்டாமல் அவ்விளநங்கை "நான் போகிறேன். இனி நானிங்கு நின்று கொண்டிருக்க முடியாது" என்று கூறிவிட்டு அப்பால் அதிவேகமாய்ச் சென்றனள். இரண்டொரு நிமிஷங்களில் அவளுடைய உருவம் இருளில் மறைந்து விட்டது.

அவளுடன் பேசிக்கொண்டிருந்த மனிதனும் அவள் பின்னே வேக மாகத் தொடர்ந்து சென்றனன்.

நேயர்களே! அவர்கள் அப்பால் சென்றதும் நானும் என்னுடைய மறை விடத்திலிருந்து ஓடிவந்து அவர்கள் போனவழி சென்றேன். சிறிது தூரம் சென்றபின் அம்மனிதன் அவளுக்கருகேயே நடந்தவண்ணம் அவளிடம் பேசிக்கொண்டு சென்றதைக் கண்டேன். வேகமாய்ச் சென்று அவர்களது சம்பாஷணையை முற்றிலும் கவனிக்க வேண்டுமென்று நான் எண்ணங் கொண்டேனாலும் இதற்கு என்மனம் துணியவில்லை மேலும் இரவில் நான் ஒரு திருடனைப்போல் மாசிலாமணி முதலியாரின் தோட்டத்தில் இப் படியுமப்படியுமாக மறைந்து ஒளிந்துகொண்டிருப்பது சந்தேகத்திற்கு இடங் கொடுக்குமாதலால், இனி அங்கு நிற்பதே ஆபத்தான விஷயமெனத் தீர் மானங் கொண்டு வந்த வழியே திரும்பி சுவரேறிக் குதித்து நான் தங்கி யிருக்கும் ஹோட்டலுக்கு வந்துசேர்ந்தேன்.

# " ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

ஸ்ரீமுகஞு ஆனிமீ—கலியுகாதி 5035, சாலிவாகனம் 1856,
பசலி 1342-43, கொல்லமாண்டு 1108, ஹிஜரி 1352,
இங்கிலீஷ் 1933ஞு ஜூன்மீ—ஜூலைமீ

| ஆனி மீ | ஜூன் மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | புதன் | சப்28-0 | சத8-58 | சி8-58அ | மிதுனரவி நா-19-20 |
| 2 | 15 | வியா | அஷ்28-40 | பூர10-43 | சித்60 | ஏற்றம் ஸ்தாபிக்க |
| 3 | 16 | வெள் | நவ30-53 | உத்14-18 | சி14-18அ | சுபகாரியம் செய்ய |
| 4 | 17 | சனி | தச34-35 | ரே19-18 | ம19-18சி | வியாதியஸ்தர் குளிக்க |
| 5 | 18 | ஞா | ஏகா 39-25 | அஸ்25-23 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 6 | 19 | திங் | து44-48 | பர32-13 | சி32-13மர | கூர்ம ஜயந்தி, கரிநாள் |
| 7 | 20 | செவ் | திர50-45 | கி✻39-30 | சி39-30அ | கிருத்திகை, கடன் தீர்க்க |
| 8 | 21 | புத | சது56-48 | ரோ46-58 | சித்60 | மாசசிவராத்திரி |
| 9 | 22 | வியா | ●அமா60 | மிரு54-20 | மர60 | சர்வத்திர அமாவாசை |
| 10 | 23 | வெள் | அமா2-43 | திரு60 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 11 | 24 | சனி | பிர8-18 | திரு1-25 | சித்60 | சந்திர தெரிசனம் |
| 12 | 25 | ஞா | துதி13-28 | புன8-8 | சித்60 | விவாகம், சர்வ மூகூர்த்தம் |
| 13 | 26 | திங் | திரி17-53 | பூச14-10 | சித்60 | மாச சதுர்த்தி விரதம் |
| 14 | 27 | செவ் | சது21-30 | ஆயி19-20 | சித்60 | நவக்கிரகசாந்தி செய்ய |
| 15 | 28 | புதன் | பஞ்23-53 | மகம்23-23 | சி23-23அ | சுப மூகூர்த்தம் செய்ய |
| 16 | 29 | வியா | சஷ்24-50 | பூர26-3 | சி26-3மர | சஷ்டி, 10-க்குள் மழை |
| 17 | 30 | வெ | சப்24-8 | உத்27-8 | சி27-8அ | ஆனித்திருமஞ்சனம் |
| 18 | 1 | சனி | அஷ்21-43 | அஸ்26-25 | மர60 | சுபகாரியங்கள் விலக்க |
| 19 | 2 | ஞா | நவ17-33 | சித்24-3 | சித்60 | வியாதிடஸ்தர் குளிக்க |
| 20 | 3 | திங் | தச11-50 | சுவா20-0 | அ20-0மர | சர்வ மூகூர்த்தம் செய்ய |
| 21 | 4 | செவ் | ஏகா3-58 து56-25 | விசா14-43 | ம14-43சி | |
| 22 | 1933ஞு ஜூலை மீ 5 | புத | திர47-18 | அனு8-18 | சித்60 | |
| 23 | 6 | வியா | சது37-58 | கேட்1-15 மூல53-58 | பி1-15சித் | |
| 24 | 7 | வெள் | ○28-48 | பூரா47-3 | பி47-3சித் | |
| 25 | 8 | சனி | பிர20-10 | உத்40-45 | சித்60 | |
| 26 | 9 | ஞாய | துதி12-28 | திரு35-38 | அ35-38ம | |
| 27 | 10 | திங் | திரி6-0 | அவி32-5 | சித்60 | |
| 28 | 11 | செவ் | சது1-13 பஞ்58-28 | சத30-10 | மர60 | |
| 29 | 12 | புதன் | சஷ்57-58 | பூர30-15 | அ30-15சி | அவமாக, ஏற்றம் ஸ்தாபிக்க |
| 30 | 13 | வியா | சப்57-58 | உத்32-13 | சித்60 | விவாகம், சர்வ மூகூர்த்தம் |
| 31 | 14 | வெள் | அஷ்60 | ரேவ36-3 | அமி60 | திருதினஸ்பிருக் |
| 32 | 15 | சனி | அஷ்1-38 | அஸ்41-23 | சித்60 | கடகரவி நா-46-25-வி |

| | | | |
|---|---|---|---|
| | | | சூரி சுக்-பு |
| ராகு — சனி | 8-கடக-புத 10-கன்-செ 14-டக-சுக் | | செவ் குரு கே |
| | | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.